For private circulation only

Book Post

https://christianhistoricalsociety.in/

# கிறிஸ்தவ வரலாற்றுச் சுவடுகள்

விலை : ரூ 60

திசை தெரியாமல் திகைக்காதிருக்க திருச்சபை வரலாறு தெரியவேண்டும்

ஜூலை 2022

இதழ் 26

## மிஷனெரிகளின் பங்களிப்பால் மாற்றத்தை கண்ட மானுடவினம்



# ஆசிரியர் சுவடு

கிறிஸ்துவுக்குள் அன்பான வரலாற்றுச் சுவடுகள் வாசகர்களே,

ஆண்டவரும், மீட்பருமாகிய இயேசு கிறிஸ்துவின் இனிதான நாமத்தினாலே உங்கள் அனைவருக்கும் திருநெல்வேலி வரலாற்றுச் சங்கத்தின் சார்பாக வாழ்த்துக்களைத் தெரிவித்துக் கொள்ளுகின்றேன்.

இம்மாத இதழானது "திருச்சபை மக்களின் வாழ்வியல் நடைமுறைகளில் மிஷனெரிகளின் தலையீடுகளும் அதன் விளைவுகளும்" என்ற கருப்பொருளின் அடிப்படையில் கட்டுரைகளும், ஆய்வுக்கட்டுரைகளும் கொடுக்கப்பட்டுள்ளது. குறிப்பாக தென்தமிழக மக்கள் கிறிஸ்தவ நடைமுறைகளுக்குள் வந்த பொழுது அவர்கள் எதிர்கொண்ட பிரச்சனைகள், பிறமத திருமண உறவுகள், திருச்சபையை பிளவுகளினால் ஏற்பட்ட புதிய மார்க்கங்கள், சுய தொழில்களில் ஏற்பட்ட மாறுதல்கள், மிதவாதத்தால் சாதியத்தில் ஏற்பட்ட விளைவுகள்-தீர்மானங்கள், பொட்டுக்கட்டுதல், நம் பகுதியில் சமீபத்திய தொல்லியல் தளங்கள், புகழ்பெற்ற நாவல்கள், மிஷனெரியின் அழைப்பு மற்றும் வரலாற்றுச் சங்க பணிகளையும் நம் பகுதிகளில் நடக்கும் விநோதமான பண்டிகைகளின் வரலாற்று ஆய்வுகளை கொண்டு சிறந்த கட்டுரைகளினால் இவ்விதழ் அமைந்துள்ளது.

இவ்விதழளை வாசிக்கும் நேயர்கள், மிஷனெரிகளின் தியாகங்களை மற்றவர்களோடு கூட பகிர்ந்துக் கொண்டு, மிஷனெரிகள் ஏற்றிய அந்த தியாக தீபத்தை அடுத்த தலைமுறையினரின் கரங்களில் கொடுப்பது நம் கட்டாய பணியாகும். எனவே வாசகர்கள் மற்றவர்களுக்கு இதழை அறிமுகப்படுத்த அன்போடு கூட கேட்டுக் கொள்ளுகின்றேன். ஒவ்வொரு மாதமும் இவ்விதழை வெளியிடுவதற்கு மிகுந்த பொருட்செலவுகள் உண்டு. முடியுமானால் காணிக்கையாகவோ அல்லது நன்கொடையாகவோ கொடுத்து தாங்க அன்போடு கூட கேட்டுக் கொள்ளுகின்றேன்.

வரும் நாட்களில் வரலாற்று ஆய்வுகளை இன்னும் அதிகப்படுத்த திட்டங்கள் உண்டு. உங்கள் பகுதியிலுள்ள வரலாற்று செய்திகளை எழுத விருப்பமுள்ளவர்கள் ஒவ்வொரு மாதமும் கொடுக்கப்படும் தலைப்பின் கீழ் எழுதி அனுப்ப அன்பாடுகூட கேட்டுக் கொள்ளுகின்றேன்.

வரும் ஆகஸ்ட் மாத தலைப்பாக **"உபத்திரவத்தைக் கையாளுவதில் பின்பற்றத் தகுந்த வரலாற்று மாதிரிகள்"** என்ற தலைப்பில் ஆய்வு கட்டுரைகளை எழுதி அனுப்ப அன்புடன் கேட்டுக்கொள்கிறேன். உபத்திரவம், பாடுகள் மத்தியில் திருச்சபைகளை கட்டி எழுப்பிய நல்ல தலைமை, தலைவர்களைப் பற்றிய வரலாற்று உண்மைகளை அனுப்பித்தாருங்கள். நீங்கள் அறிந்த உண்மைகளை அறியாதவர்களோடு பகிர்ந்துக்கொள்ளுங்கள்.

கிறிஸ்துவின் பணியில்



மன்னா செல்வகுமார்
ஆசிரியர்
christianhistorical@gmail.com

கிறிஸ்தவ வரலாற்றுச் சங்கம்–திருநெல்வேலி
வெளியீடு

மன்னா செல்வகுமார் – ஆசிரியர் – 91767 80001
சுஜித் ரெக்ஸ் – வடிவமைப்பு – 75388 12218



# மிஷனெரிகளின் தலையீடுகளும் அதன் விளைவுகளும்

● ஜா. ஜான் ஞானராஜ்
திருநெல்வேலி

தென்தமிழகத்தில் இயேசு சபை எனும் கத்தோலிக்க கிறிஸ்தவ மிஷனெரி சங்கம் முதன்முதலாக நற்செய்தி அறிவித்தது. சீர்திருத்தக் கிறிஸ்தவத்தில் S.P.C.K மிஷனெரி சங்கம் முதன்முதலாக மிஷனெரி பணிகளைத் தொடங்கியது. அதன் பின் L.M.S எனும் லண்டன் மிஷனெரி சங்கம் தமது நற்செய்தி பணிகளை மயிலாடி, நாகர்கோவில், நெய்யூர் ஆகிய இடங்களை தலைமையிடமாகக் கொண்டு தொடங்கியது. 1820 இல் தென் தமிழகத்தில் பாளையங்கோட்டையைத் தலைமையிடமாகக் கொண்டு C.M.S எனும் மிஷனெரி சங்கம் கனம். ரேனியஸ் ஐயரவர்களை முதல் மிஷனெரியாக நியமித்து தனது பணிகளை தொடங்கியது. S.P.G மிஷனெரி சங்கம் முதலூர், நாசரேத், இடையன்குடி, சாயர்புரம், தூத்துக்குடி ஆகிய இடங்களை தலைமையிடமாகக் கொண்டு மிஷனெரி பணிகளை தொடங்கியது. இந்த ஐந்து மிஷனெரி சங்கங்களே தென்தமிழகத்தில் பணியாற்றிய தொடக்ககால மிஷனெரி சங்கங்கள்.

### திருமண காரியங்களில் மிஷனெரிகளின் தலையீடுகளால் ஏற்பட்ட விளைவுகள்

#### 1.நாசரேத்

தென்தமிழகத்தில் S.P.G மிஷன் சங்கத்தின் தலைமையிடமாக இருந்த கிராமங்களில் முக்கியமானது நாசரேத். இந்த ஊரில் வேதநாயகம் - தங்கம்மாள் தம்பதியரின் மகனாக 24.10.1823 இல் பிறந்தவர் அருமைநாயகம். இவர் உபதேசியாராகப் பணி செய்த போது அவர்களுக்காக வைக்கப்பட்ட மாங்டன் வேதாகமத் தேர்வில் முதல் மாணவராக தேர்ச்சி பெற்றபடியால் சாயர்புரம் செமினரியில் கல்வி கற்க மிஷனெரிகளால் அனுப்பப்பட்டவர். அங்கு இவர் மாணவர் தலைவராக இருந்தபடியால் சட்டாம்பிள்ளை என்ற அடைமொழி பெயர் இவருக்கு கொடுக்கப்பட்டது. அந்தப் பெயரே இன்றுவரை நிலைத்து விட்டது.

1850 இல் இவருக்கும் இவரது தாய்மாமா பிரகாசபுரம் பட்டி மதுரநாயகம் - நட்சத்திரம் அம்மாள் தம்பதியரின் மகள் சுவாமியடியாள் என்ற செல்வம் அம்மாளுக்கும் இரு குடும்பத்தாரின் சம்மதம், இவரது விருப்பம் காரணமாக 1850 இல் திருமணம் நிச்சயம் செய்யப்பட்டது.

அக்காலத்தில் மிஷனெரிகள் தங்களுக்கு கீழ் பணி செய்யும் ஆசிரியர்கள், உபதேசிமார்கள் தங்களது சம்மதத்தின் படியே திருமணம் செய்ய வேண்டும் என்ற எண்ணம் உடையவர்களாக, சபை ஊழியர்களின் வாழ்வியல் நடைமுறைகளில் தலையிடுகிறவர்களாக இருந்தனர்..

நாசரேத் மிஷனெரி கனம். கேமரர் ஐயரவர்கள் இதை ஏற்றுக்கொள்ளவில்லை, அவர் தனது வீட்டில் பணி செய்துவந்த, அவரால் வளர்க்கப்பட்ட மிஷன் பள்ளியில் கல்வி கற்றிருந்த பெண் ஒருவரைத் திருமணம் செய்ய சட்டாம்பிள்ளை அருமைநாயகத்தை வற்புறுத்தினார். அந்தப் பெண் சட்டாம்பிள்ளை அருமைநாயகம் சார்ந்த சமூகத்தவராக இல்லை ஆதலால் சட்டாம்பிள்ளை அருமைநாயகமும் அவரது குடும்பத்தினரும் கேமரர் ஐயரவர்களின் கருத்தை ஏற்கவில்லை. அக்காலத்தில் நாசரேத் மற்றும் மூக்குப்பீறி சபை ஊழியராக நாசரேத்தின் பிரதான முக்கந்தரும் நாசரேத் தேவாலய முதல் கோவில் குட்டியாருமான கருப்பன் முக்கந்தர் அவர்களுடைய மகனாகிய சுவாமியடியான் உபதேசியார் இருந்தார். இவர் சட்டாம்பிள்ளை அருமைநாயகத்தின் மூத்த அக்கா பாக்கியத்தமாளைத் திருமணம் செய்திருந்தார். நாசரேத் கஸ்பா பள்ளிக்கூடத்தில் இரண்டாவது தலைமை ஆசிரியரான இவரிடம் தான் சட்டாம்பிள்ளை அருமைநாயகம் தொடக்கக்கல்வியைக் கற்றிருந்தார். சட்டாம்பிள்ளை அருமைநாயகம் மீதிருந்த கோபம் அவரது மூத்த அத்தான் சுவாமியடியான் உபதேசியார் மீதும் திரும்பியது. சுவாமியடியான் உபதேசியாரும் அவரது பிள்ளைகளில் ஏசுவடியான் உபதேசியார், வேதமாணிக்கம் ஆகியோரும் நாட்டு வைத்தியத்தில் தேர்ச்சி பெற்றவர்களாயிருந்தனர். ஏசுவடியான்

நாட்டு மருந்து தயாரிக்க பன்றியின் காதில் உருகிய காரீயத்தை ஊற்றியதாக கேள்விப்பட்ட கேமரர் ஐயரவர்கள் அதை குற்றமாகக் கூறி அந்த குற்றச்சாட்டை முன்வைத்து அவரது தந்தை சுவாமியடியான் உபதேசியாரை நாசரேத் மற்றும் மூக்குப்பீறி சபைகளின் சபை ஊழியர் பொறுப்பிலிருந்து பணி நீக்கம் செய்தார். இச்சம்பவம் 1855 இல் நடைபெற்றதாக அறியமுடிகிறது. சட்டாம்பிள்ளை அருமைநாயகத்துடன், அவரது மூத்த அத்தான் சுவாமியடியான் உபதேசியார், அவரது தாய்மாமா பிரகாசபுரம் மதுரநாயகம் மற்றும் ஒய்யாங்குடியில் உள்ள உறவினர்கள் என அனைவரும் இணைந்தனர். இக்காலகட்டத்தில் தமக்கு நாசரேத் மிஷனெரி கேமரர் ஐயரவர்களால் செய்யப்பட்ட அநீதிக்கு நீதி கேட்டு S.P.G., M.D.C கமிட்டியிடம் 1851 இல் அருமை நாயகம் சென்னை சென்றிருந்தார். அங்கு அவருக்கு நீதி கிடைக்கவில்லை.

அந்நேரம் அவருக்கு அங்கு யூதரபியின் நட்பும் 1849 இல் கனம். கால்டுவெல் ஐயரவர்கள் வெளியிட்ட திருநெல்வேலி சாணார் எனும் ஆங்கில நூலும் கிடைத்தது. அந்த நூலை வாசித்த போது அதில் நாடார்களைக் குறித்து நாடார்கள் மந்தபுத்திக்காரர்கள், இவர்கள் யாழ்ப்பாணத்தில் இருந்து வந்திருக்கலாம் என்ற அனுமானக்கருத்து போன்ற சில கருத்துக்கள் நாடார்கள் மனதை புண்படுத்துவதாக இருந்ததால் அந்த நூலை அக்காலத்தில் புகழ்பெற்ற சந்தையான நாசரேத் பிரகாசபுரம் சந்தையில் அந்த நூல் வாசகங்களை அப்பகுதியில் பெரும்பான்மையாக வசித்த நாடார்கள் மத்தியில் சட்டாம்பிள்ளை அருமை நாயகம் வாசித்து காட்டினார். இதனால் நாசரேத் வட்டாரத்தில் எஸ்.பி.ஜி மிஷன் திருச்சபைகளில் பிளவு ஏற்பட்டு இந்து ஏக இரட்சகர் திருச்சபை / இந்திய ஏக இரட்சகர் திருச்சபை எனும் நாட்டுச்சபை உருவானது. மூக்குப்பீறி, பிரகாசபுரம், ஒய்யான்குடி ஆகிய திருச்சபைகளில் ஒரு சிலரைத் தவிர அனைவரும் நாட்டு சபையில் சேர்ந்தனர். திருமண காரியத்தில் மிஷனெரியின் தலையீடானது திசைதிரும்பி திருச்சபையில் பிளவை ஏற்படுத்தி விட்டது.

## 2.புலவனூர்

மேற்கு திருநெல்வேலியில் C.M.S மிஷன் ஊழியத்தில் நல்லூர் சுரண்டை இவற்றை அடுத்து முக்கிய தலைமையிடமாக புலவனூர் இருந்தது. புலவனூருக்கு நற்செய்தி அறிவிக்கப்பட்ட போது. இக்கிராமத்தில் முதலில் கிறிஸ்தவரானவர் D.ஆதிநாராயணன். தொடக்க காலத்தில் மூன்று குடும்பத்தினர் மட்டுமே இவ்வூரில் குடியிருந்தார்கள். அவர்கள் சார்ந்த குடும்பங்களில் இருந்த அனைவரும் கிறிஸ்தவர்களானார்கள். மூன்று குடும்ப வகையறாக்களில் ஒரு குடும்பத்தைச் சார்ந்த மணமகனுக்கு பிற இரு குடும்ப வகையறாக்களைச் சார்ந்த குடும்பத்தினர் பெண் தர முன்வந்தனர். அந்த மணமகனுக்கு இந்த இரு குடும்பங்களுமே மிக நெருங்கிய குடும்பத்தினர். ஒருவர் அத்தை குடும்பத்தார் மற்றொருவர் தாய்மாமன் குடும்பத்தார். தங்களது குடும்பத்து பெண்ணைத்தான் அந்த மணமகன் திருமணம் செய்ய வேண்டும் என்பதில் இரு குடும்பத்தாரும் உறுதியாய் இருந்தனர். அந்த இரு குடும்பத்தாரும் புலவனூரிலிருந்த மிஷனெரியின் உதவியை நாடினர்.

இக்காரியத்தில் மிஷனெரி என்ன ஆலோசனை கூறினார் என்பது இன்று வரை புதிராகவே உள்ளது. ஒரு குடும்பத்தைச் சார்ந்த பெண்ணோடு அந்த மணமகனுக்கு திருமணம் நடைபெற்றது. இதனால் மற்றொரு பெண்ணின் குடும்பத்தினர் மிஷனெரியின் மீதும் கிறிஸ்தவத்தின் மீதும் கோபங்கொண்டவர்களாக கிறிஸ்தவத்தை விட்டு விலகி இந்துக்களானார்கள். அவர்கள் செல்வாக்கு மிக்க குடும்பத்தவராக இருந்தனர். கிறிஸ்தவத்தைக் காட்டிலும் இந்து மார்க்கம் இங்கு வேகமாக வளர்ந்தது. காலப்போக்கில் புலவனூரில் இந்துக்கள் பெரும்பான்மையாயினர்.

## 3.மறுமணம் செய்வதற்கு மிஷனெரிமார்கள் கொடுத்த தடை

19ஆம் நூற்றாண்டில் (1800-1900) பேறுகால மரணங்கள் அதிகமாக இருந்தது. அந்த காலகட்டத்தில் பேறுகாலத்தின் போது மனைவி மரணம் அடைந்தால் மனைவியின் தங்கையை அவரது கணவருக்கு திருமணம் செய்து வைப்பது வழக்கம். அக்காவின் குழந்தைகளையும் அக்காவின் கணவரையும் மனைவியின் தங்கை நன்கு கவனித்துக் கொள்வாள் என்பதை முன்வைத்து இவ்வாறு திருமணங்கள் நடந்தது. இத்தகைய திருமணங்கள் தவறானது, திருச்சபைக்கு புறம்பானது என அந்த காலகட்டத்தில் இருந்த மிஷனெரிகள் தடை செய்ததோடு அவ்வாறு திருமணம் செய்தவர்களையும் அவர்கள் சார்ந்த குடும்பத்தார்களையும் திருச்சபையை விட்டு விலக்கி வைத்தனர். இது அக்காலத்தில் சபை வளர்ச்சிக்கு பெரும் தடையாக இருந்தது.

## 4.பிற மதத்தவர்களை திருமணம் செய்ய மிஷனெரிகள் கொடுத்த எதிர்ப்பு

19ம் நூற்றாண்டில் கிறிஸ்தவர்களாக மாறியவர்கள் தங்களது தாய்மாமன் குடும்பத்தார் அத்தை குடும்பத்தார் மற்றும் தமது நெருங்கிய உறவினர்களான பிற மதத்தைச் சார்ந்த குடும்ப உறவினர்களுடன். திருமண உறவு கொள்ள மிஷனெரிகள் எதிர்ப்பு தெரிவித்து வந்தனர். அத்தகைய திருமண உறவுகளால் ஏற்கனவே கிறிஸ்தவ விசுவாசத்தில் உறுதியாக நிலைத்துள்ள குடும்பத்தார் பின்வாங்கக் கூடும் என அஞ்சினர். மிஷனெரிகளின் இத்தகைய தாக்கம் அழுத்தம் தென்தமிழகத்தில் பலனைத் தரவில்லை. உறவுமுறைகளுக்கு முக்கியத்துவம் தந்த தென்தமிழகக் கிறிஸ்தவர்கள் மிஷனெரிகளின் இந்த அழுத்தத்தை ஏற்கவில்லை.

அதேநேரத்தில் கிறிஸ்தவ விசுவாசத்தை விட்டு பின்வாங்கவுமில்லை. திருமண உறவு காரியத்தில் தம்மை நாடி வரும் பிற மத உறவினர்களுக்கு நற்செய்தி அறிவித்து அவர்களுடன் திருமண உறவு வைத்து அவர்களை கிறிஸ்தவத்துக்குள் கொண்டு வருவதில் உறுதியாக இருந்தனர். இதனால் தென்தமிழகத்தில் கிறிஸ்தவம் பெருகியது.

## ஞாயிற்றுக்கிழமை பனை ஏறி பதநீர் இறக்க மிஷனெரிகள் செய்த தடை – தொழில் சார் வாழ்வியல் முறையில் தலையீடு

சீர்திருத்த கிறிஸ்தவத்தை தென் தமிழகத்தில் பெரும்பாலும் ஏற்றிருந்த பனைத் தொழிலாளர் குடும்பங்களிடம் ஞாயிற்றுக்கிழமை ஓய்வுநாள் என்பதால் ஞாயிற்றுக்கிழமை பனைஏறி பதநீர் இறக்கும் பணியைச் செய்யக்கூடாது என மிஷனெரிகள் அவர்களைக் கண்டித்தனர். ஆனால் அவர்களோ ஒருநாள் பனைமரம் ஏறி பதநீர் ஊறும் பாளையை சீவாமல் இருந்தால் அடுத்து அந்த மரத்தில் இருந்து பதநீர் கிடைக்காது என்பதைக் கூறி கட்டுப்பட மறுத்தனர். இதை முதலில் ஏற்க மறுத்த மிஷனெரிகள் பின்னர் படிப்படியாக ஏற்றுக் கொண்டார்கள். ஞாயிறு பிரதான ஆராதனையை காலைப் பதநீர் இறக்கிய பின்பு நடத்த ஒப்புக்கொண்டனர். மதியம் 11 மணி, 12 மணி, ஒரு மணி, இரண்டு மணி என இவற்றில் ஒரு நேரத்தில் ஞாயிறு பிரதான ஆராதனை நடத்தப்பட்டது. மாலையில் பனை

ஏறி பதநீர் இறக்கி விட்டு வீட்டுக்கு வந்தவுடன் குளித்து விட்டு தேவாலயம் வரவும் அங்கு மாலை ஏழு மணியளவில் நடைபெறும் மாலை ஆராதனையில் பங்கு பெறுவதும் பின்னர் வீட்டிற்கு சென்று இரவு உணவு சாப்பிடுவது என்ற அருமையான திட்டம் தலைமை மிஷனெரி நெல்லை அப்போஸ்தலர் கனம்.ரேனியஸ் ஐயரவர்கள் மூலம் நடைமுறைப்படுத்தப்பட்டது.

### மீனவர் வாழ்வியல் நடைமுறைகளில் மிஷனெரிகளின் தாக்கம்:-

தென் தமிழக மீனவர்கள் மத்தியில் தொடக்க காலத்தில் இறைப் பணி செய்தவர்கள் இயேசு சபை மிஷனெரிகள் ஆவர். மீனவர்களிடம் அசுத்த ஆவிகளுக்கு பயப்படுகிற வழக்கம், மந்திரவாதிகளுக்கு பயப்படுகிற வழக்கம் அதிகமாக காணப்பட்டது. மீன்பிடித் தொழிலின் போதும் முத்துக்குளித்தல் தொழிலின் போதும் தங்களுக்கு ஆவிகள் மூலம் ஆபத்து வரக்கூடாது, பில்லி சூனிய ஆபத்து வந்து விடக்கூடாது என்பதற்காக மந்திரவாதிகள் மூலம் அவற்றைக் கட்டுகிற முறை இருந்திருப்பதை இயேசுசபை மிஷனெரிகளின் கடிதம் மூலம் அறிய முடிகிறது. தூய சவேரியார் மற்றும் அவருக்கு பின் இறைப்பணியாற்ற வந்த இயேசு சபை மிஷனெரிகள் 16 ஆம் நூற்றாண்டிலேயே மீனவர்களின் வாழ்வியல் முறைகளை மீனவர்கள் முழு கிராமமாக கிறிஸ்தவத்தை ஏற்றுக்கொண்ட படியினால் கிறிஸ்தவ மயமாக்கினார்கள். மீனவர்களின் பழங்கால குலதெய்வ வழிபாடுகளை கிறிஸ்தவர்களான மீனவர்களின் பிற்கால வழி மரபினர் அறியாத வண்ணம் அவற்றுக்கான அடையாளங்கள் அகற்றப்பட்டன. குருசடி எனும் சிற்றாலயங்கள் மீனவ கிராமங்களின் தெருக்கள் தோறும் அமைக்கப்பட்டன. மீனவர்களின் இன்றைய வழிமரபினர் தங்களது முன்னோர்களின் கலாச்சாரம் பண்பாடு சார்ந்த சடங்குகள் பழங்கால வழிபாட்டு அடையாளங்களை அறிந்து கொள்ள இயலாத நிலையே உள்ளது.

### பனைத் தொழிலாளர் வாழ்வியல் நடைமுறைகளில் மிஷனெரிகளின் தாக்கம்

பதினாறாம் நூற்றாண்டு முதல் கத்தோலிக்க கிறிஸ்தவத்தையும் 18 ம் நூற்றாண்டின் இறுதியிலும், 19 ம் நூற்றாண்டிலும் சீர்திருத்த கிறிஸ்தவத்தையும் ஏற்றுக் கொண்ட பனை ஏறும் தொழிலை பெரும்பாலும் செய்துவந்த நாடார் சமூகத்தினர் அக்காலத்தில் முழுமையாக கிறிஸ்தவர்களாக மாறவில்லை. நாடார்களில் அக்கால தென் திருவாங்கூர் சமஸ்தானத்தில் இரண்டில் ஒரு பங்கினரும், அக்கால ஒன்றுபட்ட திருநெல்வேலி மாவட்டத்தில் (தற்போதைய திருநெல்வேலி, தூத்துக்குடி, தென்காசி, விருதுநகர் மாவட்டங்கள்) மூன்றில் ஒரு பங்கினரும் கிறிஸ்தவர்கள் ஆனார்கள். அனேக கிராமங்கள் முழுமையாக கிறிஸ்தவத்தை ஏற்றிருந்தாலும் பெரும்பான்மையான நாடார் கிராமங்களில் இந்துக்களும் கிறிஸ்தவர்களும் கலந்து வாழ்ந்தனர். இந்து, கிறிஸ்தவர் கலந்து வாழ்ந்த நாடார் கிராமங்களில் நாடார் சமூக கலாச்சாரம் பண்பாடு சார்ந்த வாழ்வியல் நடைமுறைகளில் மிஷனெரிகள் தலையிடவில்லை.

நாடார்களின் சமூக கலாச்சாரம் பண்பாடு சார்ந்த வாழ்வியல் சடங்குகளில் முக்கியமானதொன்று சொக்காரர் அனந்தரம் செய்தல் எனும் திருமணச் சடங்கு மற்றும் சொக்காரர் பட்டம் கட்டுதல் எனும் மரணச் சடங்கு. தந்தையுடன் பிறந்த, தாத்தாவுடன் பிறந்த, பூட்டனாருடன் பிறந்த, முப்பாட்டனாருடன் பிறந்த ஆண்கள் என தந்தை வழி முன்னோர்களின் தொடக்ககாலம் முதலான ஆண்கள் மற்றும் ஆண்களின் வழிமரபில் வந்த ஆண்பிள்ளைகள் 'சொக்காரர்கள்' (பங்காளிகள்) என தென் தமிழகத்தில் அழைக்கப்படுகின்றனர். இவர்கள் தங்களது குடும்ப திருமண வீட்டில் தாங்களே உரிமையுள்ள சொக்கார உறவினர் (பங்காளிகள்) என்பதை வெளிப்படுத்தும் வகையில் வரிசையாக நின்று மணமக்களுக்குச் செய்யும் திருமணச் சடங்கு சொக்காரர் அனந்தரம் செய்தல் எனும் சடங்கு, மரண நிகழ்வில் அடக்கம் செய்வதற்கு முன்பு கல்லறைத் தோட்டத்தில் சொக்காரர்கள் (பங்காளிகள்) வரிசையாக நின்று செய்யும் சடங்கு சொக்காரர் பட்டம் கட்டுதல் எனும் சடங்கு ஆகும். இவற்றில் கிறிஸ்தவ உறவினர்கள் பங்கெடுப்பதற்கு மிஷனெரிகள் தடைசெய்யவில்லை. அதே நேரத்தில் 'சொக்காரர் அனந்தரம்' சடங்கின் நிறைவில் செய்கிற மணமக்களின் நெற்றியில் திருநீறு இடுகிற செயலைக் கிறிஸ்தவ சொக்காரர்கள் செய்யாமல் திருச்சிலுவையை நெற்றியில் வரைந்து ஜெபித்து வரும் முறையைக் கடைபிடித்தனர்.

ஒரே குடும்பத்திற்குள் இந்துக்களும் கிறிஸ்தவர்களுமாகக் கலந்து வாழ்கிற குடும்பங்களில் கிறிஸ்தவர்களானவுடன் நம்மை விட்டும் நமது கலாச்சாரத்தை விட்டும் முற்றிலும் விலகிச் செல்கிறார்கள் என்ற எண்ணத்தை இக்காரியம் இந்து உறவினர்கள் மத்தியில் மாற்றியது.

இந்துக்களும் கிறிஸ்தவர்களும் கலந்து வாழும் நாடார் கிராமங்களில் இந்துமத விக்கிரகங்களுக்கு-முன்னோர்களின் படங்களுக்கு படைக்கப்படாத உணவுப் பொருட்களை மட்டும் கிறிஸ்தவ உறவினர்களுக்கு என தனியே எடுத்து வைத்து வழங்குகிற ஒரு சிறப்பான நடைமுறை இன்றளவும் தென் தமிழகத்தில் காணப்படுகிறது. விக்கிரகங்களுக்கு படைக்கப்பட்ட உணவு பண்டங்களை உண்ணக்கூடாது என்பதை மிஷனெரிகள் தென்தமிழக கிறிஸ்தவர்களுக்கு சிறப்பாக கற்றுக் கொடுத்திருந்தனர்.

### தோள்சீலைப் போராட்டத்தில் வெற்றி கண்ட மிஷனெரிகள்

திருவாங்கூர் சமஸ்தானத்தின் சார்பில் ஆலய கட்டிடங்கள் அரண்மனை கட்டிடங்கள் பாலங்கள் கட்டப்பட்டால் ஒடுக்கப்பட்ட ஈழவர் (தீயர், பில்லவர்), நாடார்(சாணார்), துலுக்கப்பட்டர், (மாப்பிள்ளை இஸ்லாமியர்), கத்தோலிக்க நசுராணியர், குறவர், பாணர், வாணியர், கருமறவர், சாம்பவர், பரதவ முக்குவர், கைக்கோளர், இடையர் நாவிதர், வண்ணார், காமிண்டர், கம்மாளர் புலையர், சக்கிலியர் எனும் 18 சமூகத்தைச் சார்ந்த குழந்தைகளை பலி கொடுப்பது வழக்கமாக இருந்தது. மேலும் மேற்கண்ட 18 சமூகத்தைச் சார்ந்த பெண்கள் தம் மார்பகத்தை மறைத்து மேலாடை அணியவும் ஜாக்கெட் அணியவும் தென் திருவாங்கூர் சமஸ்தான அரசு தடை செய்திருந்தது.

L.M.S கிறிஸ்தவ மிஷனெரிகள், மிஷனெரிகளின் மனைவிமார்கள் பருவமடைந்த பெண் பிள்ளைகள் மேலாடை அணிய ஜாக்கெட் அணிய ஊக்கப்படுத்தியதோடு தையல் கலையையும் தையல் பள்ளிகள் மூலம் அவர்களுக்கு கற்றுக் கொடுத்தனர், இந்த ஒடுக்கப்பட்ட சமூக பெண்கள் மேலாடை மற்றும் ஜாக்கெட் அணிந்தவர்களாக சந்தைகளுக்கும் ஞாயிற்றுக்கிழமை தேவாலயங்களுக்கும் சென்றபோது அதைக் கண்ட திருவாங்கூர் சமஸ்தான அரசின் நாயர் காவல் படையினர் அவர்களைத் தாக்கியதோடு அவர்களுடைய ஜாக்கெட்களையும் மேலாடைகளையும் கிழித்தெறிந்தனர். இதனால் வெகுண்டெழுந்த

ஒடுக்கப்பட்ட சமூகத்தினர் சார்பான ஆதரவு நிலையை L.M.S மிஷனரிகள் எடுத்தனர்.

1822-1823, 1828-1829, ஆகிய ஆண்டுகளில் நடந்த முதல் இரண்டு கட்ட போராட்டங்களுக்கு பாதிரியார்கள் Rev.சார்லஸ் மீட், Rev. சார்லஸ் மால்ட் ஆகியோரும், 1857-1859 இல் நடந்த மூன்றாம் கட்ட போராட்டத்திற்கு Rev. ஜான் காக்ஸ், Rev.பேய்லிஸ், Rev.லூயிஸ், Rev.ரசல், ஆகியோர் தலைமை தாங்கினர். மூன்றாம் கட்ட போராட்ட நிறைவில் திருவாங்கூர் சமஸ்தான அரசு 26.07.1859 இல் மேலாடை அணிய சட்டப்பூர்வ பிரகடனம் வெளியிட்டு அனுமதி வழங்கியது.

### சாதிய அடக்கு முறையில் மிஷனரிகளின் மிதவாதப் போக்கும் அய்யா வைகுண்டரின் அய்யா வழி மார்க்கமும்

அய்யாவழி அன்புக்கொடி மார்க்கம் கண்ட அய்யா வைகுண்டர் முத்துக்குட்டி சுவாமிகளின் பெற்றோர் பொன்னுமாட நாடார் - வெயிலா இடையன்குடி மற்றும் ஆனைகுடியைச் சார்ந்தவர்கள். 1800 அளவில் அவர்கள் பனையேற்று தொழில் புரிய அக்கால திருவாங்கூர் சமஸ்தானத்தைச் சேர்ந்த அகஸ்தீஸ்வரம் வட்டாரத்தில் தெற்கு தாமரைகுளத்தையடுத்த சாஸ்தான்கோவில்விளை பூவண்டார்தோப்பில் குடியேறினார்கள். முத்துக்குட்டி சுவாமிகளின் தாயார் வெயிலா தாவீது சுந்தரானந்தம் காலத்து கிறிஸ்தவர் என அறியமுடிகிறது. அங்குள்ள செவிவழிச் செய்தி இதை உறுதிப்படுத்துகிறது.

1809 இல் முத்துக்குட்டி சுவாமிகள் பிறந்தவர். அக்காலத்தில் ரிங்கல்தௌபே ஐயரவர்களின் நற்செய்தி பணியால் உருவாகியிருந்த ஏழு சபைகளில் தெற்கு தாமரைகுளம் சபையும் ஒன்று. சிறுவயதில் முத்துக்குட்டி சுவாமிகள் தம் தாயாரோடு தெற்கு தாமரைகுளம் தேவாலயம் சென்று வந்தார். இளமைப் பருவத்தில் கிறிஸ்தவத்தில் ஈடுபாடு கொண்டிருந்த முத்துக்குட்டி சுவாமிகள் அந்த தேவாலயத்தில் ஆலய பணியாளராக (கோயில்குட்டியார்) பணியை செய்தார். பின் ஆலயத்தில் இரவில் வேதபாடம் வாசித்து ஜெபம் நடத்தினார். அதன்பின் அங்கு உபதேசியாரானார். அக்கால தென் திருவாங்கூர் சமஸ்தானத்தில் சாதியக் கொடுமைகள் தலைவிரித்தாடியது. தெற்கு தாமரைக்குளம் சபைக்கு மிஷன்பொறுப்பு தலைவராக இருந்த L.M.S கிறிஸ்தவ மிஷனரிகளான Rev.மீட், Rev.மால்ட் பாதிரியார்கள் தலைமையில் 1822-23, 1828-1829 களில் நடைபெற்ற தோள்சீலை போராட்டங்களை நேரில் அவர் கண்டார். திருவாங்கூர் சமஸ்தான ஆட்சியாளர்கள் சான்றோர் குல நாடார்களை மிகக் கொடுமையாக நடத்துவதைக் கண்ட முத்துக்குட்டி சுவாமிகள் அதை எதிர்த்து மிகத் தீவிரமாக செயல்பட வேண்டும் என்பதை தோள்சீலைப் போராட்டத்தை முன்னெடுத்துச் சென்ற பாதிரியார்கள் மீட் மற்றும் மால்ட் ஆகியோரிடம் எடுத்துக் கூறியதாகவும் அவர்கள் திருவாங்கூர் சமஸ்தானம் ஆங்கிலேய அரசின் நேரடி ஆட்சிக்கு உட்பட்ட பகுதி அல்ல என்றும் ஆங்கிலேய ஆட்சியின் மேலாண்மையை ஏற்றுக்கொண்ட சுதந்திர அரசாக இருப்பதால் நற்செய்திப் பணி செய்யும் தாங்கள் சாதிய வன்கொடுமைக்கு எதிராக மிகத் தீவிரமாக திருவாங்கூர் அரசை எதிர்க்க இயலாது என தெரிவித்ததாகவும் அதன் காரணமாக ஏற்பட்ட கருத்து வேறுபாட்டால் முத்துக்குட்டி சுவாமிகள் கிறிஸ்தவத்தை விட்டு வெளியேறியதாக அறிந்து கொள்ள முடிகிறது.

திருவாங்கூர் சமஸ்தானத்தில் நாடார்களை கடுமையாக ஒடுக்கிய ஆட்சியாளர்களின் வலது கரமாக செயல்பட்ட நாயர் சமூகத்தினர் சைவமதப்பற்றாளர்களாக இருந்ததால் முத்துக்குட்டி சுவாமிகளின் கவனம் வைணவத்தின் பக்கம் திரும்பியது. திருத்தங்கல் வைணவக் கோவிலில் மூன்று ஆண்டுகள் தங்கியிருந்து வைணவ நெறி முறைகளை கற்றார். அங்கிருந்து திரும்புகையில் சங்கு சக்கரங்களை பெற்றுவந்தார். தோல் / சரும நோயினால் பாதிக்கப்பட்டிருந்த அவர் கடல் நீர், கடல் காற்று அதை சுகப்படுத்தும் என்ற எண்ணத்துடன் தன் தாயாருடன் புனித யாத்திரையாக திருச்செந்தூர் சென்றார். முத்துக்குட்டியாக கடலுக்குள் சென்ற தான் அய்யா வைகுண்டர் எனும் பரம்பொருளாக கடலிலிருந்து வெளிவந்ததாகக் கூறினார். அய்யாவழி அன்புக்கொடி மார்க்கம் என்ற தனி மார்க்கத்தை ஏற்படுத்தினார்.

தெற்கு தாமரைக்குளம் கிறிஸ்தவ தேவாலயத்தில் உபதேசியாராகப் பணி செய்த காரணத்தால் கிறிஸ்தவத்தை நன்கு அறிந்திருந்த அவர் தமது மார்க்கத்தில் கிறிஸ்தவ கருத்துகளையும் உள்வாங்கிக் கொண்டார்.

முத்துக்குட்டி சுவாமிகள் சொல்லச் சொல்ல அவரது சீடர் அரிகோபாலன் அவர்களால் அகிலத்திரட்டு எனும் நூல் எழுதப்பட்டது. வாரத்தில் ஞாயிற்றுக்கிழமை புனித நாளாக அந்த மார்க்கத்தில் அறிவிக்கப்பட்டது. தேவாலயத்தில் திருமறைப்பாடம் வாசிக்கப்படுவது போல அய்யாவழி கோவிலில் அகிலத்திரட்டு நூல் வாசிக்கப்பட்டது. அந்த மார்க்கத்தில் உருவ வழிபாடு இல்லை ஞாயிறுதோறும் உம்பான் சோறு என்ற கூட்டாஞ்சோறு துவையலுடன் சாதி வேறுபாடின்றி அனைவருக்கும் ஒன்றாக பரிமாறப்பட்டது. கருவறையில் கண்ணாடி மட்டும் வைக்கப்பட்டது. மிஷனரிகளின் மிதவாதப் போக்கு அய்யாவழி அன்புக்கொடி மார்க்கம் எனும் மார்க்கம் உருவாக காரணமாக அமைந்து விட்டது.

### மிஷனரிகளின் பங்களிப்பால் ஏற்பட்ட சமூக வாழ்வியல் மாற்றங்கள்

#### 1.பொட்டுக்கட்டுதல் எனும் தேவதாசி முறை ஒழிப்பு

இந்து சமயக் கோயில்களில் பணி செய்யும்படியாக பெண் குழந்தைகளை விட்டுவிடும் பழக்கம் கடந்த நூற்றாண்டு வரை இருந்தது. இப்பழக்கத்திற்கு பொட்டுகட்டி விடுதல் என்று பெயர். இவ்வாறு விடப்பட்ட பெண் குழந்தைகள் பருவம் அடைந்தவுடன் நடனமாடும் மகளிராகவும் கோயில் பூசாரிகள் மற்றும் முக்கியஸ்தர்களின் பாலியல் தேவைகளை பூர்த்தி செய்கிறவர்களாகவும் இருப்பார்கள். இவர்கள் தேவர் அடியார் என்றும் அழைக்கப்பட்டனர். இத்தகைய உறவு முறையால் இவர்கள் கர்ப்பம் அடைந்து குழந்தை பிறக்கும் பொழுது அந்தகுழந்தைகளை ஊருக்கு ஒதுக்குப்புறமான இடங்களில் இவர்கள் வீசி எறிந்து விடுவது வழக்கமாக இருந்தது. இவ்வாறு வீசி எறியப்பட்ட குழந்தைகளுக்கும் கட்டாயப்படுத்தப்பட்டு பொட்டு கட்டி விடப்பட்ட தேவதாசி பெண்களுக்கும் அடைக்கலம் கொடுத்து அவர்களை வாழ வைத்தவர் மிஷனெரி ஏமி கார்மிக்கேல் அம்மையார்.

இவை தவறான செயல் என்பது குறித்து விழிப்புணர்ச்சியை அவர் ஏற்படுத்தினார். பெருங்குளம், திருக்குறுங்குடி வட்டாரங்களில் இப்பழக்கம் அதிகமாக இருந்தது. தொடக்கத்தில் பெருங்குளம் அருகிலுள்ள பண்ணைவிளையிலும் பின்னர் 1901 முதல் 1951 வரை 50 ஆண்டுகள் திருக்குறுங்குடி அருகிலுள்ள டோனாவூரிலும் தங்கியிருந்து டோனாவூர் ஃபெல்லோஷிப் - நட்சத்திரக் கூட்டம்

என்ற அமைப்பை ஏற்படுத்தி இவர்களுக்கு ஏமி கார்மிக்கேல் அம்மையார் வாழ்வளித்தார்.

### 2.உடன்கட்டை ஏறுதல் முறை ஒழிப்பு

தஞ்சை மன்னர்கள், மதுரை நாயக்க மன்னர்கள், ராமநாதபுரம் சேதுபதி மன்னர்கள் மரணமடைந்து எரியூட்டப்பட்ட போது அவர்களது மனைவிகளும் அவர்களோடு எரியூட்டப்பட்டனர். இதை தமிழக வரலாற்றில் நாம் காண முடியும். இம்முறைக்கு எதிராகக் குரல் கொடுத்தவர்கள் கிறிஸ்தவர்களும் கிறிஸ்தவ மிஷனெரிகளுமே. தஞ்சாவூரில் கணவர் இறந்தவுடன் இளம் கைம்பெண்ணாகிய கோகிலா லட்சுமி கட்டாயப்படுத்தப்பட்டு கணவரின் எரிந்து கொண்டிருந்த உடலை நோக்கி தள்ளப்பட்ட போது கோகிலா லட்சுமி அலறி துடித்து அபயக் குரல் எழுப்பியபோது அவரை காப்பாற்றி பாதுகாத்தவர் கேப்டன் லிட்டில்டன்.

கோகிலா லட்சுமி என்ற இந்த பிராமணப் பெண்ணே திருநெல்வேலி திருச்சபையின் தாய் என்றழைக்கப்படும் முதல் சீர்திருத்த கிறிஸ்தவ பெண்மணி குளோரிந்தா அம்மையார் ஆவார்.

### 3.பெண் கல்விக்கு முக்கியத்துவம்

பெண்களுக்கு இழைக்கப்படும் கொடுமைகளுக்கு முடிவு கட்ட வேண்டுமானால் பெண்கள் கல்வியறிவு பெறவேண்டும் என்பதை உணர்ந்த மிஷனெரிமார் பெண் பிள்ளைகள் பள்ளிக்கூடத்திற்கு வர வேண்டும் என்பதற்காக அக்காலத்தில் பெண்கள் மட்டுமே கல்வி பயிலும் வகையில் பெண்களுக்கான பள்ளிக்கூடங்களை 200 ஆண்டுகளுக்கு முன்பே தென்தமிழக மிஷன் தலைமை இடங்களாக இருந்த பாளையங்கோட்டை, நாகர்கோவில், தூத்துக்குடி, நல்லூர் நாசரேத், மெஞ்ஞானபுரம் சாயர்புரம் போன்ற இடங்களில் தொடங்கினார்கள்.

சாரா டக்கர் அம்மையாரின் நினைவாக அவரது தோழியர் அனுப்பிய நிதி உதவியால் பெண் கல்விக்காக S.T.C. கல்வி நிறுவனம் 1858 இல் பாளையங்கோட்டையில் தொடங்கப்பட்டது. பின்னர் அதன் கிளை பள்ளிக்கூடங்கள் அக்கால ஒன்றுபட்ட திருநெல்வேலி மாவட்டம் எங்கும் (தற்போதைய திருநெல்வேலி, தூத்துக்குடி, தென்காசி, விருதுநகர்) தொடங்கப்பட்டது.

# கடவுள் அருளால்
# சாதியத்தை சொல்லாலும் செயலாலும் எதிர்ப்பேன்;

**திருநெல்வேலி மிஷனில்(1846) மிஷன் பணியாற்ற விரும்பிய மண்ணின் மைந்தர்களின் பெயரை ஆயருக்குப் பரிந்துரைக்கும் முன் அவர்கள் எடுத்துக் கொள்ள வேண்டிய உறுதி மொழி:**

‘இந்து சாதியப் படிநிலையை நம்புவது கிறிஸ்து போதித்தவற்றுக்கும், அதை போதிப்பதற்கும் எதிரானது. ஓர் மனிதனை, அவன் குடும்பத்தை அவன் பிறந்த சாதிக்குள் வாழ்க்கை முழுக்க ஒடுக்கிவைப்பது அதை கடைபிடிப்பவர்களின் உள்ளத்துக்கு எதிரானது, கிறிஸ்துவ சகோதரர்களுக்குள் உள்ளார்ந்த சகோதரத்துவம் ஏற்படத் தடையானது. இந்த நாட்டில் கிறிஸ்தவ மறை பரப்புவதற்கு இடைஞ்சலானது. ஒருவன் எப்படிப்பட்ட நடத்தை கொண்டிருந்தாலும் சமூகத்தில் அவனது முன்னேற்றத்தை சாதியம் ஏற்காது. மனசாட்சிக்கு அஞ்சி வாழ்ந்து திருமணம், ஆடை மற்றும் சமூக உறவுகளில் கிறிஸ்தவ நெறி தரும் விடுதலை உணர்வில் ஊன்றியிருப்பவர்களை ஒரு சில மனிதர்கள் தங்கள் ஆற்றல், அதிகாரம் கொண்டு ஒடுக்க நினைக்கின்றனர் என்பதை உணர்வதால், இந்த சூழலில் நான் சாதியப் படிநிலையை, அவ்வழக்கத்தை கடுமையாக எதிர்க்கிறேன், அதிலிருந்து வெளியேறுகிறேன். கிறிஸ்துவை ஏற்றுக்கொண்ட ஒவ்வொரு கிறிஸ்தவரும் சாதியை விட்டு வெளியேற வேண்டும், அதை எதிர்க்கவேண்டும், இது ஒவ்வொரு கிறிஸ்தவரின் கடமை என்று ஏற்றுக்கொள்கிறேன். கடவுள் அருளால் சாதியத்தை சொல்லாலும் செயலாலும் எதிர்ப்பேன்; கிறிஸ்தவத்தை ஏற்றுக்கொண்டு சாதியத்தை எதிர்க்க முனைபவர் அனைவருக்கும் துணையிருப்பேன்.‘

●நிவேதிதா லூயிஸ்
எழுத்தாளர், சென்னை

**படம்:** அக்காலத்தில் தாகம் தீர்க்க மதராஸ் மாகாண சாலை ஓரங்களில் ஊர் மக்களால் தண்ணீர்ப் பந்தல்கள் நிறுவப்பட்டன. ஓலையால் அமைக்கப்பட்ட இந்தக் குடில்களில் பெரும்பாலும் பார்ப்பனர்கள் பணியமர்த்தப்பட்டனர். அவர்கள் கைகளால் நீரை, மோரை வாங்கிப் பருகுவதற்கு தீட்டு இல்லை என்று நம்பப்பட்டதால் இந்த ஏற்பாடு. அவர்களோ பார்ப்பனர் அல்லாதாருக்கு அவர்கள் சாதியைப் பொறுத்து தொண்டைகளிலோ கைகளிலோ நீரை ஊற்றினார்கள். தீண்டத் தகாதவர்கள் என அவர்கள் கருதியவர்களுக்கு மூங்கில் குழாயை பிளந்து வைத்துக் கொண்டு மறைவுக்கு அப்பால் நின்று அதில் நீர், மோர் ஊற்றினார்கள். - சாராள் தக்கர், 1841.



- The Tinnevelly Mission of the Church Missionary Society, Rev George Pettit, 1851.



# உங்களை அழைக்கிறேன்...

## விலைக்கிரயம் செலுத்த தயாரா?

●டாக்டர்.ஜியோ ஞானதுரை
சிவகாசி
giodurai@hotmail.com

ஐடா ஸ்கட்டர் அம்மையார் தமிழகத்தில் பணியாற்றிய மிஷனெரி பெற்றோர்களுக்குப் பிறந்தவர். தன் படிப்புக்காக பெற்றோரிடம் இருந்து பிரிந்து அமெரிக்காவில் வாழ்ந்ததால் பெற்றோர் இந்தியாவில் வாழ்ந்தது அவருக்கு அறவே பிடிக்கவில்லை. ஆனாலும் ஒரு காலக்கட்டத்தில் தன் தாயாரின் சுகவீனத்தின் காரணமாக தாயாருக்கு உதவி செய்ய இந்தியாவிற்கு வந்தார்(1890).

அன்றைய சூழலில், தமிழ் கலாச்சாரத்தில் ஆண் மருத்துவர்கள் பெண்களின் (மகப்பேறு) குழந்தைப்பிறப்பில் பங்கு பெற, சிகிச்சை அளிக்க அனுமதிக்கப்படவில்லை. ஆனால் இந்தியாவில் பெண் மருத்துவர்களே இல்லை. இந்தியா வந்திருந்த வாலிபப்பெண் ஐடா ஸ்கட்டர். ஒரே நாளிலே மூன்று ஆண்கள் தங்கள் மனைவியரின் பிரசவத்தில் அவர் உதவியை நாடினர். குழந்தைப் பிறப்பில் முன் அனுபவமே இல்லாத ஐடா தன்னால் உதவ முடியவில்லையே என வருந்தினார். மறுநாள் அந்த மூன்று பெண்களுமே குழந்தைப் பிறப்பில் இறந்ததை அறிந்தார். தமிழகப் பெண்களுக்கு உதவி செய்ய பெண் மருத்துவராக தன்னை அர்ப்பணித்தார்.

இந்திய பெண்களின் வாழ்வை மேம்படுத்த தன்னை அர்ப்பணித்த ஐடா, அமெரிக்கா சென்று தன் மருத்துவப்படிப்பை முடித்து இந்தியா திரும்பினார்(1900). இந்தியர்களின், குறிப்பாக இந்தியப் பெண்களின் சுக வாழ்விற்காக தன் முழு மூச்சோடு பணி செய்தார். தன் மருத்துவ பணியில் உதவியாய் இருக்க அநேக இந்தியப் பெண்களை பயிற்றுவித்தார். சீக்கிரத்தில் செவிலியர் பயிற்சிப் பள்ளி நிறுவப்பட்டது(1909).

இந்தியர்களுக்காகவே உயிர்வாழ்ந்த ஐடா இந்திய பெண்கள் அனைவருக்கும் சேவை செய்ய தான் ஒரு மருத்துவர் போதாது என உணர்ந்தார். இந்திய பெண்களை மருத்துவர்களாக்குவதே அதற்கு சிறந்த முடிவு என உணர்ந்தார். அதை செயல்படுத்த முடியாது என்ற அநேகரின் கருத்துக்களையும் பொருட்படுத்தாமல் இந்திய பெண்களுக்காகவே கிறிஸ்தவ மருத்துவப் பள்ளியை (1918) நிறுவினார், அந்தப் பள்ளி 25 ஆண்டுகளுக்குப் பின் MBBS பட்டப்படிப்புக்காக கல்லூரியாக மேம்படுத்தப்பட்டது(1941). இன்று அந்த கல்லூரி இந்தியாவின் தலை சிறந்த மருத்துவக் கல்லூரிகளில் ஒன்றாக விளங்குகிறது. இது நம் நாட்டின் மருத்துவ தேவைக்கு அமெரிக்க மிஷினரியான ஐடா ஸ்கட்டரின் பங்களிப்புதான்.

மேலும் ஐடா ஸ்கட்டர் மருத்துவராய் இந்தியா வந்து இறங்கியபோது(1900), இந்திய பெண்கள் மருத்துவர்களாவது நினைத்துக் கூட பார்க்கமுடியாமல் இருந்தது. ஆனால் 1960-ல் ஐடா ஸ்கட்டர் இறந்து விட்டாலும் இந்த 21- ஆம் நூற்றாண்டின் துவக்கத்தில் தமிழகத்தில் பெண்களின் மருத்துவத் தேவையை பெண் மருத்துவர்களே 99% பூர்த்தி செய்கின்றனர். இந்த அளவுக்கு வேறு எந்த மாநிலத்திலும் பெண் மருத்துவர்கள் இல்லை. இந்த சமுதாய மாற்றமும் (அவர் வாழ்க்கையில் ஒரு நாளில் கடவுள் ஏற்படுத்திய தாக்கத்தின் அடிப்படையில்) இந்திய, குறிப்பாக, தமிழ் சமுதாயத்தின் தேவைக்கு ஐடா ஸ்கட்டரின் பங்களிப்பேயாகும்.

இதைக் குறித்து என்னோடு சேர்ந்து சிந்திக்க உங்களை அழைக்கிறேன். இது கடவுளின் திட்டம். கடவுள் தமிழ்ப் பெண்களை நேசித்தார். தமிழ்ப் பெண்கள் பிரசவத்தில் மரிப்பதை அவர் விரும்பவில்லை. எனவே தமிழ்ப் பெண்களை மருத்துவர்களாக்க கடவுள் திட்டமிட்டார், தன் திட்டத்தை செயல்படுத்த ஐடா ஸ்கட்டர் அம்மையாரை அழைத்தார். கடவுள் ஏற்கனவே பல முன்னேற்பாடுகளை செய்து வைத்திருந்தார் எனலாம். எடுத்துக்காட்டாக நெல்லை சாராள் டக்கர் கல்லூரியில் பெண்கள் மருத்துவப் படிப்புக்குத் தயார் படுத்தப்பட்டிருந்தனர். மேலும் ஐடா ஸ்கட்டர் அவர்கள் 1960ல் மரித்து விட்டார். அவரால் ஆரம்பிக்கப்பட்ட இந்த இயக்கம் அவர் மரித்த பின்னும் தொடர்ந்தது. எனவே இதை கடவுளே திட்டமிட்டார், கடவுளே செயல்படுத்தினார் என புரிந்து கொள்ளலாம்.

இதைப் படிக்கும் நண்பரே, இன்றைய சமுதாயத்தில் பல தேவைகளும், பல தவறுகளும் உள்ளன (லஞ்சம் இல்லா சமுதாயம், குடி இல்லா சமுதாயம்). இந்த சமுதாயத்தின் தேவைகள் சந்திக்கப்பட, தவறுகள் திருத்தியமைக்கப்பட, கடவுள் உங்களை அழைக்கலாம். இதையெல்லாம் எதுவும் செய்ய முடியாது என்று நீங்கள் நினைக்கலாம். உண்மைதான். நம்மால் எதுவும் செய்ய முடியாது தான். ஆனால் இதைத் திட்டமிடுபவரும் கடவுள்; செயல்படுத்துபவரும் கடவுள். அவரால் இதை செய்து நிறைவேற்ற முடியும். அவர் உங்களை அழைத்தால், அவர் அழைப்புக்கு உங்களை ஒப்புக்கொடுங்கள். அவர் படிப்படியாக உங்களை நடத்துவார். கடவுளால் அவருடைய திட்டத்திற்குப் பயன்படுத்தப்படுவது அவர் நமக்கு தரும் சிறப்புரிமை. அப்படி அவரது சிறப்புரிமையை பெற்றுக்கொள்ள, அவரது அழைப்புக்கு நம்மை ஒப்புக்கொடுக்கலாமே! அதற்காக கடினமாக உழைக்கவும், விலைக்கிரயம் செலுத்தவும் தயாராகலாமே!.




●ஜே.பர்னபாஸ்
சேலம் வரலாற்றுச் சங்கம்

# சேலத்து அப்போஸ்தலனுக்கு எழுப்பப்பட்ட வடிவமைப்பான கல்லறை மாடம்

சேலத்து அப்போஸ்தலன் (Apostle of Salem) என்றும், சேலம் மிஷன் இயக்கங்களின் தந்தை (Father of Salem Missions) என்றும், இந்தியாவின் தொழிற்கல்வியின் தந்தை (Father of Industrial Education in India) என்றும், வரலாற்றில் புகழ்ச்சியுடன் அழைக்கப்பட்டு வரும் கல்வியாளரும், ஜெர்மானிய கிறிஸ்தவத் திருத்தொண்டருமான சங்கை ஜான் மைக்கேல் லெக்லர் ஐயர் (Rev.John Michael Lechler, L.M.S.,-1804-1861) அவர்களுக்கும், அவருக்கு முன்பே மரித்து அங்கு அடக்கம் செய்யப்பட்டு, காலப்போக்கில் இல்லாமல் அழிந்துபோன தியாகத் திருத்தொண்டர் சகோதரி ஆன் மேட்செல் (Miss.Ann Machell) அம்மையாரின் கல்லறையையும் இணைத்து எழுப்பப்பட்ட வடிவமைப்பான கல்லறை மாடம் (Mausoleum) சங்கை J.M.லெக்லர் ஐயரின் 161 ஆவது நினைவுநாளில், அதாவது கடந்த 17-6-2022 வெள்ளிக்கிழமை காலை 11 மணியளவில் கோவைத் திருமண்டல பேராயர் பேரருட்திரு.திமோத்தி ரவீந்தர் அவர்களால் நேரலையில் பிரதிஷ்டை செய்யப்பட்டது.

161 ஆண்டுகள் கழித்து இந்த தியாகத் திருத்தொண்டர்களுக்கு ஒரு வடிவமைப்பான கல்லறை மாடம் அவர்களது தியாக வாழ்க்கை, அர்ப்பணிப்பு, தன்னலமற்ற சேவை இவைகளின் நினைவுகூரலாக, சேலம் C.S.I லெக்லர் நினைவாலய திருச்சபையாரின் நன்றி பாராட்டுதலாக, எழுப்பப்பட்டிருப்பது நமது கண்களுக்கு ஆச்சரியமாக இருக்கிறது.

**சகோதரி ஆன் மேட்செல் அம்மையாரின் கல்லறை:**

இங்கே இயேசுவிற்கு ஊழியம் செய்து அதன் மத்தியில் மரணத்தைத் தழுவி, காலப்போக்கில் மறக்கப்பட்டு, மறைக்கப்பட்டு, கல்லறைகூட இல்லை என்ற நிலையில், வரலாற்று ஆவணங்களின் அடிப்படையில் சகோதரி ஆன் மேட்செல் அம்மையாரின் வரலாற்றைத் தேடி, நாங்கள் சமர்ப்பித்த தொடர் வேண்டுகோள்கள், ஆய்வு முடிவுகள், ஒளிப்பட பதிவுகள், இவைகளை ஏற்றுக்கொண்டு அந்த அம்மையாரின் நினைவிற்கு ஏற்ற நினைவகம் C.S.I லெக்லர் நினைவாலய நிர்வாகத்தினரால் அமைக்கப்பட்டது சிறப்பினும் சிறப்பானது.

அம்மையாரின் சேவைகள் நாம் தேடியவரை எங்கும் சிலாக்கித்து எழுதப்பட்டிராத நிலையில், அவரின் கல்லறை சாசன கல்வெட்டை மட்டும் சேலம் மாவட்டத்தில் பலமுறை கலெக்டராக பதவிவகித்த வரலாற்று அறிஞர் திரு. லீ பானு தனது சேலம் மானுவெல் நூலின் (A Manual of the Salem District in the presidency of Madras - H.Lee Fanu, volume -1- the district, Madras,1883.) 169 ஆவது பக்கத்தில் 'In the compound of the London Mission, Salem' என்ற தலைப்பின் கீழ் "1846, 5th May. Miss.Ann Machell,aged 44-years." என்று முதல் பதிவாக பதிவிட்டு, அதற்கு அடுத்ததாக, சங்கை J.M.லெக்லர் ஐயரின் கல்லறை சாசன கல்வெட்டையும்

"1861, 17th June. The Rev.J.M.Lechler, aged 56 years and 9 months." என்று பதிவு செய்துள்ளது இங்கே அடிப்படை ஆதாரமானது. இந்த வரலாற்று அமைப்பு அன்று திரு.லீ பானு பார்த்து பதிவிட்ட வண்ணமே இங்கே மீண்டும் மறு உருவாக்கம்(Re-established)செய்யப்பட்டிருக்கிறது.

**திருமதி.மேரி ஜேன் அம்மையாரின் கல்லறை :**

**(Tomb of Mrs.Mary Jane)**

சகோதரி ஆன் மேட்செல் அம்மையாரின் கல்லறைதான் கல்லறை சாசன கல்வெட்டு களவாடப்பட்ட நிலையில், இந்த இடத்தில் திருமதி.மேரி ஜேன் கல்லறை என்று தவறுதலாக அமைக்கப்பட்டிருக்கக் கூடும் என்று நினைக்கிறேன். ஏனெனில் சங்கை J.M.லெக்லர் ஐயரின் மகளான திருமதி.மேரி ஜேன் அம்மையாரின் கல்லறை திருப்பத்தூர் CSI கிறிஸ்துநாதர் ஆலயத்தில் (The erstwhile London Mission Church, Tirupatur) உள்ளது என்பதை நாங்கள் அங்கு சென்று ஆய்வு நடத்தியபோது கண்டறிந்தது. அதற்கான ஆவண ஆதாரமாக திரு.H.லீ பானு

எழுதிய மேற்குறிப்பிட்ட நூலின் 172ஆம் பக்கத்தில் 'In the London Mission Church, Tirupatur.'என்ற தலைப்பின் கீழ் வரும் பதிவுகளை ஆதாரமாக கொள்ளலாம்.

வரலாற்று ஆதாரங்களையும், ஒளிப்பட ஆதாரங்கள் மற்றும் திருப்பத்தூர் ஆலய மூத்த உறுப்பினர்கள் ஆகியோரின் பேட்டி ஆகியவற்றின் அடிப்படைகளில், இரண்டு இடத்தில் ஒருவரின் கல்லறை இருக்க சாத்தியமில்லை என்ற அடிப்படையிலும், திருமதி.மேரி ஜேன் அம்மையாரின் கல்லறை அகற்றப்பட்டு, அதன் சாசன கல்வெட்டுகள் அங்கேதானே சுவற்றில் நினைவுகூருதலுக்காக பதிக்கப்பட்டது.

திருமதி.மேரி ஜேன் அம்மையாரின் கல்லறை திருப்பத்தூர் C.S.I கிறிஸ்துநாதர் ஆலயத்தில் இருந்தாலும், அம்மையாரின் நினைவிற்காக ஒரு சிறப்பான நினைவுச் சின்னம் இங்கே இந்த இரண்டு திருத்தொண்டர்களின் அருகே அமைக்கப்பட்டாலும் அது ஏற்புடையதாகவே அமையும்.



**திருமதி.ஈடித் எமிலி டிக்னம் அம்மையாரின் கல்லறை:**
**(Tomb of Mrs.Edith Emily Dignum)**

சேலம் மாவட்ட கலெக்டராக இருந்த திரு.F.J.ரிச்சர்ட்ஸ் தனது 'Gazetteer of the Salem District -Volume - 2, Statistical appendix for Salem district, Madras,1932.' (supplement to the salem district gazetteer, part-1,& 2) (page no.57 under the heading. Paragraph 2 This tomb of Mrs.Dignum is mentioned.) 'என்ற நூலில் இதே லண்டன் மிஷன் வளாகத்தில் சங்கை J.M. லெக்லர் ஐயர் கல்லறை அருகே இருந்ததாக குறிப்பிட்டுள்ள மிஷனெரி தாய் திருமதி.ஈடித் எமிலி டிக்னம் அம்மையாரின் கல்லறையையும் (In Affectionate Remembrance of Edith Emily beloved wife of the Rev.A.A.Dignum who died September 24th, 1903 aged 32 years.) மறு உருவாக்கம் (Re-establish) செய்து இங்கே அமைத்து, வரலாற்றை அதன் ஆதாரங்களுடன் கண்டறிந்து, உண்மைக்கு சான்று பகர வேண்டுகிறேன்.



வானத்தையும் பூமியையும் தமது வல்லமையுள்ள வார்த்தையினால் உருவாக்கிய, சர்வ வல்லமையுள்ள தேவனாகிய கர்த்தருடைய நாமத்தினால் திருநெல்வேலி கிறிஸ்தவ வரலாற்று சங்கத்தின் குடும்பத்தினர்கள் யாவருக்கும் அன்பின் வாழ்த்துக்கள். இந்தியாவின் மேல் தரிசனம் பெற்று, கரிசனையோடு நற்செய்தி ஊழியம் செய்த மிஷினரிகளின் வாழ்க்கை வரலாற்றை, தங்களுடைய சொத்துகளையும், உடைமைகளையும் மாத்திரமல்ல தங்களையே இயேசுவுக்காக அர்ப்பணித்து, கட்டியெழுப்பிய திருச்சபைகளின் வரலாற்றை மிஷினரிகளின் தன்னலமற்ற, பலவிதமான அருட்பணிகளை எப்படி தெரிந்து கொள்வது என்று எண்ணிக் கொண்டிருந்த என்னைப் போன்றவர்களுக்கு எல்லா தகவல்களையும் ஒருசேர கொண்டு வந்து சேர்க்கும் விதமாக வெளிவந்த கிறிஸ்தவ வரலாற்றுச் சுவடுகள் என்ற மாபெரும் பொக்கிஷத்திற்காக தேவாதி தேவனை நன்றியோடு துதிக்கிறேன்.

கிறிஸ்தவ வரலாற்று சுவடுகள் புத்தகத்தின் சீரியப் பணி இரண்டாம் ஆண்டை நிறைவு செய்து, மூன்றாம் ஆண்டில் அடியெடுத்து வைத்திருப்பதை எண்ணி மகிழ்கிறேன். இன்னும் ஏராளமான அரும்பெரும் வரலாற்று தகவல்கள் நமது கிறிஸ்தவ வரலாற்று சுவடுகள் புத்தகம் மூலமாக வருங்காலங்களில் சிறப்பாக வெளிவர தேவனாகிய கர்த்தர்தாமே கிருபை செய்வாராக.



**ஆல்வின் ஜேக்கப்**
தூத்துக்குடி

**பல மிஷனெரிகள் தங்கள் உயிரை துச்சமாய் எண்ணி இயேசுவின் அன்பை அறிவிக்கும் ஆவலுடன் தமக்கு நேர்ந்த எல்லா பாடுகளையும் சிரித்த முகத்துடன் ஏற்றுக்கொண்டனர். அப்படிப்பட்ட மிஷனெரிகளின் வாழ்க்கை வரலாற்றை அறிந்திருக்க வேண்டியது ஒவ்வொரு கிறிஸ்துவனின் கடமையாகும். சிறிது நேரம் செலவழித்தால் ஒரு மிஷனெரியின் அறிய வாழ்க்கையை அறிந்து கொள்ளலாம். கர்த்தர் துணை செய்வாராக.. வரலாற்று சுவடு மாத இதழ் மூன்றாம் ஆண்டில் மென்மேலும் வளர ஆண்டவராகிய இயேசு கிறிஸ்து கிருபை செய்வார்..**



**S.Mohandass Daniel**

# மிஷனரிப் பணி

● ஜோ

ஜான் தியாப்பிலஸ் ஜார்ஜ் பேரன்புரூக் ஐயரவர்கள் இந்தியாவில் நமது தமிழ்நாட்டில் 1844 - 1859 வரை திருநெல்வேலி மாவட்டம் சுரண்டை பகுதிகளில் ஏறத்தாழ 14 ஆண்டுகள் மிஷனெரிப் பணி செய்து, பின் ஓராண்டு சிவகாசி பகுதியில் பணியாற்றி, விருதுநகர் மாவட்டம் பனையடிபட்டி கிராமத்திற்கு அருகிலுள்ள செந்தட்டி அய்யனார் கோவில் என்ற கிராமத்தில் அருட்பணி செய்ய சென்றபோது காலரா நோயினால் பாதிக்கப்பட்டு 1859 மார்ச் 25 ம் தேதி, தனது 41 வது வயதில் மரித்துப் போனார்.

இவரது தகப்பனாரும், தாயாரும் ஜெர்மன் தேசத்திலிருந்து இந்தியாவிற்கு 1817-ம் ஆண்டு லுத்தரன் சபையின் இரண்டு மிஷனெரிகளோடு சி.எம்.எஸ் (CMS) சார்பாக பணியாற்ற வந்தவர்கள். 1817 - 1823 வரை சென்னையிலும், பின்பு தரங்கம்பாடி, மாயவரம் பகுதிகளில் 1823 - 1831 வரை மிகச் சிறப்பான பணிகளை ஆற்றிவிட்டு 1831ஆம் ஆண்டில் மீண்டும் தன் சொந்த நாட்டிற்கே சரீர பலவினத்தினிமித்தம் திரும்பினர். 1833ம் ஆண்டு, மே 6-ம் தேதி தேவராஜ்யம் சென்றடைந்தார் தகப்பனார். இவர்கள் நன்றாக தமிழை அறிந்தவர்கள்.

1818ம் ஆண்டு மேற்படி மிஷனெரி தம்பதியினருக்கு மகனாக சென்னையில் தான் பேரன்புரூக் ஐயரவர்கள் பிறந்தார். தொடக்க கல்வியை சென்னையிலே கற்றுள்ளார். பின் உயர்கல்விக்காகவும், அதன்பின் இறை கல்வியை கற்கவும் லண்டனுக்கு சென்று (1839 - 1843 வரை) படித்து விட்டு, 1843 ஆம் ஆண்டு டீக்கனாக அருட்பொழிவு பெற்று, 1844 ஆம் ஆண்டில் குருப் பட்டமும் பெற்று. முழுநேர மிஷனெரியாக அபிஷேகம் செய்யப்பட்டார். 1844ம் ஆண்டு முதல் 1858 வரை சுரண்டை பகுதிகளில் மகத்தான பணியாற்றினார். கனம் ரேனியஸ் அவர்கள் 1820-ல் தொடங்கிய அருட்பணியைத் தொடர்ந்து செய்தார் பேரன்புரூக் ஐயர். அப்போது கடுமையான உபத்திரவங்கள் இப்பகுதிகளில் ஆண்டவரை ஏற்றுக் கொண்ட முதல் தலைமுறை விசுவாசிகளுக்கு ஏற்பட்டது. இப்பகுதியில் இருந்த சபைகள் எண்ணிலடங்கா உபத்திரவங்களை சந்தித்தன. இந்த சூழ்நிலையில்தான் கனம். பேரன் புரூக் இந்த பகுதிக்கு அருட்பணியாற்ற வந்தார். 1844ம் ஆண்டு அக்டோபர் 25ம் நாள் பாளையங்கோட்டை வந்து சேர்ந்து, சுரண்டை பகுதியில் தனது ஊழியத்தை ஆரம்பித்தார். 1846இல் சுரண்டையில் ஆரம்பித்த செகண்டரி போர்டிங் பள்ளி அநேக கல்விமான்களை உருவாக்கியது. இன்றைக்கு பேரன் புரூக் மேல்நிலைப்பள்ளி என அழைக்கப்படுகின்றது,

அன்றைய நாட்களில் காலரா நோய்க்கு ஏராளமான மக்கள் மருந்துகள் இல்லாத காரணத்தால் பலியாயினர். இதை கண்ட ஐயரவர்கள் சுரண்டையில் மிஷன் மருத்துவமனையை ஆரம்பித்து, நாட்டு வைத்தியர் சங்கரலிங்கம் செட்டியார் என்பவரது உதவியுடன் மருத்துவ பணியாற்றி அநேகரை காலரா நோயிலிருந்து காப்பாற்றினார்.

பத்து ஆண்டுகள் ஊழியம் நிறைவுற்று பல கிராமங்களில் திருச்சபைகளும், பள்ளிகளும் நிறுவப்பட்ட நிலையில் 29.10.1854 ஆம் நாள் ஐயரவர்களின் மனைவி காய்ச்சலால் பாதிக்கப்பட்டு மரித்துப் போனார்கள். ஆனால் பேரன்புரூக் ஐயரவர்கள் ஊழியப் பாதையில் சற்றும் சோர்வடையவில்லை. பின்வாங்கவும் இல்லை. 1855ம் ஆண்டு இங்கிலாந்து சென்று ஜெர்மனியில் போதகராக பணியாற்றும் தனது மைத்துனர் வசம் தன் மூன்று பிள்ளைகளையும் ஒப்படைத்துவிட்டு, இரண்டு ஆண்டுகள் 3 குழந்தைகளுடன் ஜெர்மனியில் வசித்தார். கர்த்தருடைய அழைப்பு தனக்கு இந்தியாவே என்பதை திட்டமாக உணர்ந்து பிள்ளைகளின் மேல் உள்ள பாசத்தை தியாகம் செய்துவிட்டு 1857-ல் இந்தியா திரும்பினார். 1857 ஆகஸ்ட் மாதம் மீண்டும் சுரண்டைக்கு வந்து தான் விட்டுச் சென்ற அருட்பணியைத் தொடர்ந்தார். 100 கிலோமீட்டர் சுற்றளவிற்கு நடந்தே சென்று, மனைவியை இழந்தும், பிள்ளைகளை பிரிந்தும் ஆண்டவருக்காக அருட்பணியாற்றினார். சுரண்டை திரும்பிய ஓரிரு மாதங்களில் வடதிருநெல்வேலி, சிவகாசி பகுதியில் பணி செய்த ராக்லாந்து ஐயரவர்களின் உடன் ஊழியர் கனம்.சார்லஸ் எவ்ரி அவர்கள் திடீரென நோயுற்று மரித்துப் போனார்கள். எனவே கனம் ராக்லாந்து அவர்களுக்கு உதவுவதற்காக C.M.S நிர்வாகத்தின் ஆனையை ஏற்று 1858ம் ஆண்டு சிவகாசி பகுதிக்குச் சென்றார். பலநாட்கள் கிராமங்களிலேயே தங்கி ஊழியம் செய்யும் பழக்கம் இவரிடம் உண்டு. அவருடைய பங்களாவில் அவரை அதிகம் பார்க்க முடியாது.

1859ம் ஆண்டு மார்ச் 25ம் நான் ஒரு குழுவாக செந்தட்டி அய்யனார் கோவில் என்ற கிராமத்திற்கு ஊழியத்திற்கு சென்றார்கள். முதலில் ராக்லாந்து ஐயரை காலரா நோய் தாக்கியது. பேரன் புரூக் தன்னிடமிருந்த மருந்துகள் மூலம் கனம் ராக்லாந்தையம் மேலும் ஏழு பேரையும் குணப்படுதினார். கடைசியில் காலரா நோய் கனம் பேரன்புரூக்கை தாக்கியது. மருந்துகள் வேலை செய்யவில்லை. இறுதிவேளை வந்தது. அவர் சொன்ன இறுதி வார்த்தைகள் 'நான் விசுவாசித்து இருக்கிறவர் இன்னார் என்று அறிவேன். உலகைப் பிரிந்து போக ஆயத்தமாய் இருக்கிறேன். அதையே நான் விரும்புகிறேன். என் அருமை பிள்ளைகளைப் பற்றி எனக்கு கவலை இல்லை. ஏனென்றால் என்னை இதுவரை வழிநடத்தின் தேவன், அவர்களையும் வழிநடத்துவார்.'

கனம் ராக்லாந்து அவர்கள் சில ஆறுதலான வசனங்களை கனம் பேரன்புரூக்-குக்கு சொல்ல, அமைதியாக நித்தியம் சென்றடைந்தார். 1859 மார்ச் 29. இவரது கல்லறை கனம் எவ்ரி ஐயரின் கல்லறை இரண்டும் பனையடிப்பட்டி (விருதுநகர் மாவட்டம்) கிராமத்தில் உள்ளது. 1818 - 2022, 204 ஆண்டுகள் ஓடிவிட்டன. நமது மண்ணில் புதைக்கப்பட்ட இவரது சரீரம், உயிர்த்தெழுதலின் நாளிலே நம்மைப் பார்த்து மகிழ்வோடு வரவேற்குமா? அல்லது கண்ணீரோடு முகம் திருப்புமா?

சிந்திப்போம்... செயல்படுவோம்... ஆத்தும ஆதாயம் செய்வோம்....



# மாம்பழச் சங்கம்

திருநெல்வேலி திருமண்டிலத்தில் விழாக்களில் மாம்பழச் சங்கம் ஒரு விநோதமான பண்டிகை அதன் வரலாறு மிகச் சுவையானது.

நெல்லை அப்போஸ்தலன் ரேனியஸ் நாட்களில் மக்கள் கூட்டங் கூட்டமாகக் கிறிஸ்தவ மதம் தழுவினர். 1825 ம் ஆண்டு அதனை தொடர்ந்த ஆண்டுகளை அறுவடையின் காலம் எனலாம். புதிதாகக் கிறிஸ்துவை ஏற்றுக் கொண்டவர்களின் நடை, உடை, கலை, கலாச்சாரம் அனைத்தும் மாறி புதிய நாகரீகம் அவர்களை அரவணைத்தது. பிரித்தெடுக்கப்பட்ட தனி சாதியாகப் பீறிட்டெழுந்தனர். கொத்தடிமைத்தனத்திலிருந்து விடுபடக் கொதித்தெழுந்தனர்.

நெல்லை நாட்டில் குரங்கணி முத்துமாலையம்மன் கோயில் கொடை விழா ஆனி மாதம் மிகச் சிறப்பாக நடைபெறும். பத்து நாட்கள் ஒரே ஆட்டபாட்டம் தான். வெளியூர்களிலிருந்து மக்கள் வருவார்கள். கடா, அரிசி, மஞ்ச மசால் மற்றும் அனைத்துப் பொருள்களும் கொண்டு வருவர். தாமிரபரணி ஆற்றில் குளித்து ஆட்டுக்கறி புசித்து ஆடிப்பாடி மகிழ்வது ஓர் ஆனந்த அனுபவம். வீட்டுக்கொரு ஆட்டுக்கடா வெட்டி மூன்று நாட்கள் டோரா அடித்து சாமி கும்பிடுவர். ஆற்று மணலில் ஆடிப்பாடி உண்டு உறங்கிப் பரவசம் கொள்வர்.

புதிதாகக் கிறிஸ்தவர்களான மக்கள் அந்த ஆனி மாதம் என்ன செய்வார்கள். ஒரு கிராமத்தில் பாதிப்பேர் கிறிஸ்தவகளென்றால் மீதிப் பேர் குரங்கணி அம்மன் கோயிலுக்குப் போவார்கள். அதைப் பார்த்த புதுக் கிறிஸ்தவர்கள் பின் வாங்கிப் போய்விடக் கூடாதே - அல்லது இளக்கரித்து விடக் கூடாதே. அதற்கு ஒரு மாற்று வழி கண்டு பிடிக்க வேண்டுமே! என்று அன்றைய கிறிஸ்தவர்கள் எண்ணினது இயல்பு.

1832 ஆம் ஆண்டு டோனாவூர் சேகரத்தில் ஏற்பட்ட காலரா நோயினால் மக்கள் பலர் உயிரிழந்தனர். அப்போது டோனாவூரின் தலைமை உபதேசியாராக இருந்த இரத்தினம் உபதேசியார் அவர்கள் உபதேசிமார் உபாத்திமார்களுக்கு உதவ வேண்டும் என்று ரேனியஸ் உதவியுடன் அனாதைகளுக்காகவும், விதவை பெண்கள் உதவ 'டோனாவூர் சேகர சகாய நிதி' ஆரம்பிக்கப்பட்டது. இந்நிதி உதவியால் கிறிஸ்தவ சபைகளில் இருந்த ஏழை கைம்பெண்கள் பயன்பெற்றனர். இதன் பின்பு ஊழியரின் மனைவிகள் விதவைகளாக நேரிடின் அவர்களது பராமரிப்புக்காக ரேனியஸ் பல திட்டங்களை தீட்டினார். 1834 ஆம் ஆண்டு ஜீன் மாதம் நடைபெற்ற மாதாந்திரக் கூட்டத்தில் 'திருநெல்வேலி சி.எம்.எஸ் உபதேசிமார் உபாத்திமார் கைம்பெண் நிதியை' அல்லது 'விதவைகள் நலச்சங்கம்' ஆரம்பித்தார். அதற்கு ஊழியரே உதவ வேண்டுமென ரேனியஸ் கேட்டுக்கொண்டார்.

அந்த விழாவை கைம்பெண்கள் நலச்சங்க விழா நாளை குரங்கணி அம்மன் கோயில் கொடை நாளுக்கு மாற்றினார். அந்நாள் 1834 ஜீலை 8 புதன்கிழமை. அந்நாளில் ஆரம்பத்தில் ஊழியர்கள், சபை மூப்பர்கள் முதலியோர் குடும்பமாக வில்வண்டி கட்டி பாளையங்கோட்டை வந்தனர்.

இன்றைய திரித்துவ அத்தியட்சாலய வளாகத்தில் கூடி ஆராதித்தனர். அது மாம்பழ சீசனானபடியால் மாம்பழங்கள் வண்டி வண்டியாக அங்கு வந்து குவியும். ஆலயத்தில் ஆராதித்து ஆற்றில் குளித்து மகிழ்வர். அதே நாளில் இன்றும் நடந்து வருகிறது.

1835 க்குப் பிறகு ஜார்ஜ் பெற்றிட் ஐயர் தாம் அதனை பொதுமக்களின் பண்டிகையாக மாற்றினார். அம்மன் கோயிலுக்குச் சென்றது போலவே உற்சாகமாகப் பாளையங்கோட்டைக்கு வந்தனர், வில் வண்டியில் ஒட்டன் மாடு பூட்டி ஜல் ஜல் என்று வரும் அழகே தனி. ஆண்டுதோறும் கூட்டம் அதிகமானது. கூடார வண்டிகளில் குடும்பத்தோடு வந்தனர். மாம்பழம் நிறைந்து வழிகிற காலமாதலால் அதற்கு மாம்பழச் சங்கம் என்ற பேர் பிரபலமாயிற்று.

1849 முதல் மாம்பழச் சங்கம் என்றும் பின்னர் கைம்பெண்கள் சங்கம் என்றும் வழங்கப்பட்டு வந்தது. பொதுவாகப் பாளையங்கோட்டை கிறிஸ்தவ மக்கள் மாம்பழச் சங்க விழாவில் பங்கு பெறுவதில்லை. குரங்கணி அம்மனை வழிபட்டு வந்த மக்களே அதிகமாக நான்கு திசைகளிலிருந்து பாளை மாநகர் நோக்கி வந்தமையால் தங்கள் பெண் பிள்ளைகளுக்கு மாப்பிள்ளை பார்த்து 'ஒழுங்கு' செய்யவும்





தோதுவாயிருந்தது. அது மிக வெற்றிகரமாகவும் - ஆண்டுக்காண்டு விருத்தியாகவும் இருந்தது.

மாப்பிள்ளை பெண்ணையும், பெண் மாப்பிள்ளையையும் இயற்கையாகப் பார்த்துக் கொள்ள வாய்ப்பாகவும் இருந்தது. எனவே இதனை பலர் மாப்பிள்ளைச் சங்கம் என்றும் அன்புடன் அழைக்கலாயினர்.

பேராயர் அ . ஞா . ஜெபராஜ் ( 1953 ) பேராயர் . டி . எஸ் . கேரட் (1971) ஆகியோர் காலங்களில் இரு நாட்களின் விழாவானது. முந்தின நாள் மாலை கதாகாலட்சேபமும், மறுநாள் காலை பரிசுத்த நற்கருணை ஆராதனையும், நண்பகலில் காணிக்கை வழிபாடும், சிறப்பு அருளுரையும் நடைபெற்று வந்தன.

திருமண்டில இருநூறாவது ஆண்டு விழாவினை கொண்டாடிய பேராயர் தானியேல் ஆபிரகாம் அவர்கள் காலத்திலிருந்து மூன்று நாள் விழாவானது. மூன்றாம் நாள் நெல்லைத் திருமண்டில ஆண்டு விழாவாகக் கல்வி நிறுவனங்களுக்கு விடுமுறை விடப்பட்டு அனைத்து ஆசிரியர்களும், மூப்பர்களும் பங்கேற்று மிகச் சிறப்பாகக் கொண்டாடப்பட்டது.

பேராயர் ஜேசன் எஸ் . தர்மராஜ் அவர்கள் காலத்தில் நூற்றாண்டு மண்டபம் உள்ளும், புறமும் புதுப்பிக்கப்பட்டு 217 ஆவது மாம்பழச் சங்கமும் ஆண்டு விழாவும் சி . எஸ் . ஐ . , பொன்விழா ஆண்டில் புதிய நோக்குடன் - புத்தம்புது தெம்புடன் நடந்தது. (1997)

பாளை மாம்பழச் சங்கத்தின் தனிச் சிறப்பு யாதெனில் ஆயிரக்கணக்கான பிச்சைக்காரர்களும், தொழுநோயாளர்களும் நூற்றாண்டு மண்டபத்தின் முன்புள்ள இரு மருங்கிலும் மூன்று நாட்களுக்கு முன்பே இடம்பிடித்து துண்டை விரித்து எல்லை கட்டி அமர்ந்திருப்பர். மூன்று, நான்கு நாட்களும் ஊண், உறக்கம் எல்லாம் அந்த இடத்திலேதாம், வெளியூர்களிலிருந்து வரும் கிராம மக்கள் ஏராளமாக அரிசி, காசு, காய்கறிகள் கொண்டு வந்து வரிசையாக அள்ளி வழங்குவர்.

ஆண்டு தோறும் நேர்ச்சை செய்து நல்ல ஆயத்தங்களுடன் வருவர். மொட்டை போடுவது உட்பட எல்லா நேர்த்திக் கடன்களும் தவறாது நடைபெறும். தங்கள் வாலிபப் பெண்பிள்ளைகளுக்கு அனைத்து ஆபரணங்களையும் பூட்டி அழகு பார்ப்பர். தங்கள் விரிப்புத் துண்டுகளில் காசும், பொருளும் நிறைந்து பிச்சைக்காரர்கள் மிகுந்த மகிழ்ச்சியோடு உலாவருவர்.

உண்மையில் மூன்று நாட்களும் ஏழைகளின் நலச் சங்கமாகவே இருந்து வருகின்றன. கைம் பெண்கள் சங்கம், மாப்பிள்ளைச் சங்கம், மாம்பழச் சங்கம் என்று பல பேர்களைப் பெற்றிருப்பினும் 'மாம்பழச் சங்கம்' என்ற பேரே நிலைத்து நின்றது.

**மன்னா செல்வகுமார்**
பதிப்பாசிரியர்

தமிழ் நாட்டின் தனிப்பெரும் நாவலாசிரியர்

## அ மாதவையா அவர்களின்

# கிளாரிந்தா

தமிழ்நாட்டில் வெளி வந்த முதல் வரலாற்று நாவல்

தொடர் –16

### கமலாபாயின் கண்டுபிடிப்பு

ஆகாசத்துக்கும் பூமிக்குமா ஆஞ்சநேயர் பிரம்மாண்டமாத் தெரியறார். பாக்கறத்துக்குப் பயங்கரமா இருக்கார். இப்ப போயிட்டார். ஒரு ஆத்தங்கரையும் பக்கத்துச் சரிவிலே சுடுகாடும் தெரியறது. ஈரத்துணியை இடுப்பிலே கட்டிண்டு ஒரு ஆள் தனியா நின்னுண்டிருக்கான். அவன் முன்னால் மணல்லே என்னமோ யந்திர கட்டம் வரைஞ்சிருக்கு. அது நடுவிலே மரத்தால் செஞ்ச ஒரு மனுஷ உருவம் இருக்கு. அவன் அடிக்கடி கிழக்கே பாத்துண்டே இருக்கான். ஆரோ பொம்மனாட்டி வரா. சாரதான்னா அது? அவங்கிட்டே என்னமோ சொல்றா. ஒரு தங்க மோதிரத்தையும் கொடுக்கறா. அது கிளாவிருந்தா போட்டுண்டிருந்த மோதிரம்னா! திருப்தியில்லாதவன் போல அவன் அவகிட்டே என்னமோ சொல்றான். உடனே சாரதா முந்திச் சேலையிலே முடிஞ்சிருந்த பணத்தை எடுத்துக் கொடுக்கறா. மூணுரூபா மாதிரி இருக்கு. அவன் அவளைப் போகச் சொல்றான்.

அவளும் போயிடறா. ஒரு சின்னப் பையிலேந்து ஒரு விக்கிரகத்தை எடுத்து அவன் ஜெபிக்கிறான். அப்புறமா மணலிலே வரைஞ்சிருந்த கட்டத்து முனையிலே அதை வைக்கிறான். மோதிரத்தையும் பணத்தையும் பைக்குள்ளே போட்டுக்கிறான். பையிலேந்து ரெண்டு ஆணியை எடுத்து அந்த மர உருவத்தின் அடிவயத்திலே வச்சு கல்லாலே அடிச்சு ஒண்ணொண்ணா உள்ளே செலுத்தறான். திரும்பவும் என்னமோ மந்திரம் முணுமுணுக்கிறான். அப்புறம் எல்லாத்தையும் எடுத்துண்டு கட்டத்தை அழிக்கிறான். ஆத்துலே போய்க் குளிச்சுட்டு கோணங்கி உடையைப் போட்டுக்கிறான். இப்ப அவனை ஊருக்குள்ளே பாக்கறேன். மேக்குரத வீதியிலே ஒரு பிராமணாள் வீட்டு முன்னாலே நின்னு கொட்டு அடிக்கிறான். ஒரு கைம்பெண் வெளியே வரா கிளாவிருந்தாவைப் பாக்கறதுக்கு சில சமயம் வருவாளே, அவளே தான் இது. அவன் அவகிட்டே அந்த ஆணிகள் அடிச்ச மர உருவத்தைக் காட்டி என்னமோ சொல்றான். அவ வீட்டுக்குள்ளே போயி சாப்பாடும் பழைய துணியும் எடுத்துண்டு வந்து அவனுக்குக் கொடுத்து, அவனைப் போகச் சொல்றா. அவன் போயிடறான். இப்ப திரும்பவும் ஆஞ்ச நேயர் தெரியறார். இப்ப மறைஞ்சுடறார்.'

பட்டேரி அமாத்யாவைப் பார்த்து, 'சம்பந்தப்பட்ட நோயாளி ஜீரண உறுப்புகளின் நோயால் அவதிப்படுகிறவரா?' என்று கேட்டான். அமாத்யா 'ஆம்' என்றதும், 'இரண்டு இரும்பாணிகளால் வயிறு துளைக்கப்பட்ட பின்னரும், அவர் இன்னும் உயிரோடு இருப்பதே ஆச்சரியம்' என்றான்.



இந்த அருவருப்பான பில்லி சூனியத்தின் விளைவை உடனே தடுப்பதற்கான முயற்சியைத் தொடங்கவேண்டும் என்று பட்டேரியைக் கேட்டுக்கொண்டார்கள். பட்டேரி உடனே எதிராளி மிக சக்திவாய்ந்த மாந்திரீகனாக இருப்பதுபோ தெரிவதால் எதிர்ப்பு பலமாக இருக்குமென்றும் தான் தனது திறமை படிப்பு எல்லாவற்றையும் ஒருங்கே செலுத்தி வேல் செய்யவேண்டியதிருக்கும் என்றும், அதனால் இரு நூறு ரூபாய்க்குக் குறைந்து வேலையை ஒப்புக்கொள்ள முடியாது என்றும் சொன்னான். நோயாளியின் உயிர் மிக மெல்லிய இழையில் உசல்லாடிக்கொண்டிருப்பதால் உடனே தொடங்க வேண்டிய காரியம் என்றும் சொன்னான். உடனேயே அவனிடம் இருபது ரூபாய் கொடுத்துவிட்டு, நோயாளி பிழைத்துக் கொண்டால் நூறு ரூபாய் கொடுப்பதாக வாக்குறுதி அளித்து வேலை ஒப்படைக்கப்பட்டது.

ஏவலின் விளைவைத் தடுக்க நோயாளியின் கையில் கட்டிக் கொள்ள அவன் ஒரு தாயத்தைக் கொடுத்தான். ஆண்ணானால் வலதுகையிலும், பெண்ணானால் இடதுகையிலும் கட்டிக்கொள்ளவேண்டியது என்றான். நோயாளியைப்பற்றித் தனக்கு ஒன்றுமே தெரியாதது போல் ஒரு பாவலா காட்டிக் கொண்டான்.

மாந்திரீகன் சென்றதும் இரு பெண்களும் சளசளவென்று வெகுநேரம் பேசிய வண்ணம் இருந்தனர். தாலி கட்டிய புருஷனை கொல்லத் துணிந்தவள் எப்பேர்ப்பட்ட கிராதகியாய் இருக்கவேண்டும்,

என்று மூக்கின் மேல் விரலை வைத்துப் பேசிப் பேசி அதிசயித்தார்கள். கமலாபாய், கிளாவிருந்தாவையும் சாரதாவையும் இன்னும் உக்கிரமாகக் கண்காணிக்க வேண்டும் என்றும், அவசிய மானால் அவர்களை ஓர் அறைக்குள் பூட்டி வைக்கலாம் என்றும் முடிவு செய்தாள். அவள் மாத்திரம் என் அத்திம்பேரைக் கொல்லட்டும் பார்த்துக்கொள்கிறேன்; அவளையும் அவர் கட்டையோடு உடன்கட்டை ஏற்றி அனுப்பிவிட்டுத்தான் மறுவேலை பார்ப்பேன்' என்று கறுவிக்கொண்டே அவள் அமாத்யாவின் வீட்டைவிட்டுக் கிளம்பினாள்.

**தந்தையும் மகனும்**

மாதவன் திரும்பிய பிறகு கிளாவிருந்தா அவனை ஒரே ஒரு முறை கொல்லைப் புறத்தில் பார்த்திருந்தாள். பணிப் பெண் துணிகள் துவைத்துக் கொண்டிருந்ததைப் பார்வையிடுவதற்காக அவள் கிணற்றடிக்கு வந்தாள். அவனும் அப்பொழுது அவர்கள் வீட்டுப் பின்புறத்துக்குவர நேர்ந்தது. தட்டியின்மீது அவன் மேலுருவத்தை அவள் கண்டாள். அவன் அவளை முதலில் கவனிக்கவில்லை. ஆனால் பணிப் பெண் அவளிடம் ஏதோ பேசியபோது அவன் திரும்பிப் பார்த்தான். இருவர் கண்களும் சில கணங்கள் சந்தித்தன. அவள் உடனேயே அவன் தன்னைப் பார்க்க முடியாதவாறு சட்டென்று குனிந்து கொண்டாள். ஆனால் கண்களின் அந்தச் சந்திப்பு ஒருவர் மன நிலையை மற்றவருக்குப் புரியவைக்கப் போதுமானதாக இருந்தது. பணிப் பெண் வேலைக்குப் புதியவள். கிளாவிருந்தா குனிந்ததைக் கவனித்த அவள் 'அவருக்கு ஏமமா மறையணும், நீங்க? அவர் உங்களுக்கு மகன் தானே?' என்றாள். கிளாவிருந்தா பதில் எதுவும் சொல்லாமல் வீட்டினுள் சென்றுவிட்டாள். கமலாபாய் இவர்களைப் பார்க்க நேர்ந்தால் கதைகள் கட்டிவிடுவாள் என்று அவள் பயந்தாள்.

ஆனால் அவள் நெஞ்சு படபட வென்று அடிக்கத் தொடங்கிற்று. அன்று மாலை அவளால் வேலை எதுவும் செய்யமுடியவில்லை. இரவு தூங்கவும் இயலவில்லை. அவள் விதவையாகி விடுவதுபோலவும், விசித்திரமான கனவுகள் கண்டாள்.

மாதவனின் நெஞ்சுத் துடிப்பு இன்னும் வேகமாகவும் அவன் கனவுகள் விசித்திரமானவையாகவும் இருந்தன. அன்று இரவு அவன் கிளாவிருந்தாவை இறுகத் தழுவி முத்தமிட்டதும், பெரிய தந்தையின் காலடி ஓசை கேட்டுத் திருடனைப்போல ஓடிவிட்டிருந்தான். அந்தக் காதலை அவன் மனதுள் போற்றி வளர்த்தான். ஆனால் இது தன்னை மாத்திரம் பாதிக்கிற விஷயம் அல்ல என்பதை அவன் அறிவான். தன் காதலுக்கு உரியவள் முறைக்கு மாற்றாந்தாயாக இருந்த போதிலும், அவளிடம் தன் உள்ளக் கிடக்கையைக் காட்டுவதற்காக அப்படி இழிந்த முறையில் நடந்துகொண்டதை யாரும் சரி என்று ஒப்புக்கொள்ளவோ அவனுக்காக அனுதாபப்படவோ மாட்டார்கள் என்பது அவனுக்கு நன்கு தெரியும்.

ஆனால் அவள் இதைப்பற்றி என்ன நினைக்கிறாள் என்ற பயமும் சந்தேகமும் அவனை வதைத்தது. தான் செய்த அந்தக் கோழைச் செயலுக்காக அவள் அவனை வெறுக்கிறளோ, தாழ்வாக நினைக்கிறாளோ? அவளுக்கு அவன்மீது காதல் இல்லை, இரக்கமாவது உண்டா ? அவனை ஓர் உடன் பிறந்தானாகவோ அல்லது மகனைப்போலவோதான் கருதுகிறாளோ? அந்தப் பாதகி கமலாபாய் பழிவாங்குவதற்காக வேண்டுமென்றே இப்படிச் செய்திருக்கலாமோ? தன் எதிரியை அழிப்பதற்காக அவள் தான் தன்னை இந்த மடச்செயலைச் செய்யும்படித் தூண்டிவிட்டாளோ?

ஆனால் ஒன்று மட்டும் நிச்சயம். கிளாவிருந்தாவும் தன்னைக் காதலிக்கிறாள் என்று அவன் நினைத்ததால் மாத்திரமே அவன் அப்படிச் செய்துவிட்டான் அல்லது ஒரு நாளும் அவன் அக்காரியத்துக்குத் துணிந்திருக்கமாட்டான்.

அவன் தந்தை அவன் செயலை வன்மையாகக் கண்டித்து அவனுக்கு ஒரு கடிதம் எழுதியிருந்தார். அதனால் பெரிய தந்தைக்கு விஷயம் தெரிந்திருக்கவேண்டும் என்று யூகித்தான். ஒன்று அவளாக அதைத் தன் கணவனிடம் சொல்லயிருக்கவேண்டும். அப்படியானால் அவன் கேள்விக்கு, விடை எளிதாகப் புரிந்தது அல்லது பெரிய தந்தை அவன் ஓடுவதைப் பார்த்துவிட்டு, உடனேயே அவளிடம் வந்து அவளிடமிருந்து விஷயத்தை வற்புறுத்திக் கிரகித்திருக்கவேண்டும். நடந்தது அதுவானால் அந்த அபலையை அவர்கள் என்னபாடு படுத்தியிருப்பார்கள் என்று நினைக்கவும் நடுங்கினான். தன்னால் தன் காதலிக்கு நிந்தனையும் துன்பமும் ஏற்பட்டிருக்குமோ என்று நினைத்தபோது அவனுக்குத் தன்னையே மன்னித்துக் கொள்ள முடியவில்லை.

அவன் பரதேச வாழ்க்கையில் இந்தச் சந்தேகங்களையும் பயங்களையுமே துணைவர்களாகக்கொண்டு காலத்தைக்கழித்தான். தஞ்சைக்குத் திரும்பி வந்ததும் பெரிய தந்தையைப் பார்க்கத் தான் அனுமதிக்கப்படவில்லை என்ற செய்தியும் அவ்வளவு நம்பிக்கை அளிப்பதாய் இல்லை. ஆனால் கிளாவிருந்தாவை எப்படியாவது சில வினாடிகளாவது சந்தித்துவிட்டால் அவள் பார்வையிலிருந்து அவள் மனநிலையைக் கண்டு கொள்ளலாம் என்று காத்திருந்தான்.

ஆகவே அன்று கிணற்றடியில் பணிப் பெண்ணின் பேச்சைக் கேட்டவன் திரும்பி, உள்ளத்தைக் காட்டும் பளிங்கு போன்ற அவள் கண்களைச் சந்தித்ததும் சில கணங்கள் ஆனந்தத்தால் அவன் இருதயம் நின்றுவிட்டது. வானலோகத்தில் மிதப்பது போல் ஓர் உணர்வு உண்டாயிற்று. அவள் சட்டென்று குனிந்து விட்டாள்தான். ஆனால் அதனாலென்ன? அவளும் தன்னைக் காதலிக்கிறாள். அவள் அவனைத் தாழ்வாக நினைக்கவோ வெறுக்கவோ இல்லை என்பது அவனுக்குத் தெளிவாகத் தெரிந்தது. அப்புறம் அவன் கற்பனை மதம் பிடித்துத் திரியத் தொடங்கிற்று. கட்டில் அடங்காத திட்டங்கள் அவன் அசட்டு மூளையில் உருவான வண்ணம் இருந்தன. அன்று இரவு அவனுக்கு உணவு செல்லவில்லை. உறக்கமும் பிடிக்கவில்லை. ஏன், பல இரவுகள் அப்படியே கழிந்தன.

அவனுக்குப் பெரிய தந்தை வீட்டுக்குச் செல்வதற்கு அனுமதி இல்லாமல் இருந்ததும் அல்லாமல், இருவீடுகளுக்கும் இடையே இருந்த கதவும் இப்பொழுது அடைத்தே கிடந்தது. மாதவனின் தம்பி நாராயணன் இப்பொழுது பெரிய தந்தையின் வீட்டில் வசித்து வந்தான். அவன் மாத்திரம் தாய் தந்தையரையும் உடன் பிறந்தவர்களையும் பார்க்க அடிக்கடி வருவதும் போவதுமாய் இருந்தான். கள்ளம் கபடு இல்லாத சுபாவம் உடையவன். நல்ல சூட்டிக்கையானவனும்கூட. மாதவனுக்கு அவன்மீது மிகுந்த பிரியம் உண்டு. தன் காதலியோடு ரகசியத் தொடர்பு ஏற்படுத்திக்கொள்ளத் தீவிரமாக ஆசை கொண்டதால் இந்தச் சிறுவனைப் பயன்படுத்திக் கொண்டால் என்ன என்று எண்ணினான். ஆனால் ஆர அமர யோசித்ததில் அது அற்பமானது, ஆபத்தானதும்கூட என்று முடிவுக்கு வந்து அந்த யோசனையைக் கைவிட்டு விட்டான்.

ஏதாவது ஒரு சாக்கை வைத்துக் கொண்டு அவன் கொல்லைப் புறம் அடிக்கடி சென்றான். இனி தந்தையைப்பற்றிப் பார்க்கலாம். அமாத்யா வெங்கண்ணா பண்டிதர் பேராசைக்காரர். கொள்கைகள் அற்றவர். அவர் இன்னும் அரசரின் அமாத்யாவாகவே இருந்து வந்தார். ஆனால் துளசாஜி தம் தந்தையைப் போன்றவர் அல்ல; அரசுரிமைக்குப் பிறந்து அரசர் ஆனவராகையால், மந்திரிகள்மீது சார்பு கொள்ளவில்லை. அமைச்சர்களிலே அவருக்கு அறவே பிடிக்காதவர்கள் இருபிராமண சகோதரர்களான திவானும் அமாத்யாவும்தான். வயதில் இளமையாகவும் அனுபவமில்லாதவராகவும் இருந்த போதிலும் திடச் சித்தம் உள்ளவர். தந்தை பிரதாப்சிங்கைப்போல் மூடநம்பிக்கைகள் உள்ளவர் அல்ல. தனக்குவேண்டியவர்கள் சிலரையும் உடன் வைத்திருந்தார்.

திவான் வெகு நாட்களாக உடல் நலமில்லாமல் ரஜாவில் இருந்ததால் வேறு ஒருவரை திவானாக நியமனம் செய்திருந்தார். அமாத்யாவை திவானாக்கவில்லை. அரசருக்கு தன்மேல் நம்பிக்கை இல்லாததால் பதவியிலிருந்தே விலக்கிவிடுவாரோ என்றுகூட அமாத்யாவுக்குப் பயம் ஏற்பட்டது.

அமாத்யாவும் அவசரப்பட்டு ஒன்றிரண்டு தடவைகள் அரசரிடம் உப்பூரைப் பற்றிப் பேச்சு எடுத்துவிட்டார். பண்டிதராவ் பேத்தியின் கல்யாணத்தின்போது மலையூரைத் தான் ஸ்திரீதனமாகக் கொடுத்தாரென்றும் உப்பூரைத் தன் தமையனுக்குப் பரிசாகவே கொடுத்து விட்டதாகவும் பெரும் போடாகப் போட்டார். ஆகையால் இப்போது உப்பூரை தமையனுக்குத் திருப்பிக்கொடுக்கவேண்டும் என்று கேட்டார்.

முதல் தடவை துளசாஜி எதுவும் பதில் சொல்லவில்லை. அவர் மௌனமே, பொதுவாக அவர் மந்திரிகளைப் பயமுறுத்துவதாக இருக்கும். இரண்டாம் முறை பேச்சு வந்தபோது அரசர், 'அது உண்மையாக இருக்குமானால் என் தந்தை சந்நியாசியின் விருப்பங்களை நிறைவேற்றாமல் விட்டது ஆச்சரியமாக இருக்கிறதே' என்று சொன்னதோடு நிறுத்திக்கொண்டார்.

அமாத்யா உப்பூரைப்பற்றி நம்பிக்கை இழந்துவிட்டார். அதை அடைவதற்கான வழியே இல்லை என்று தோன்றியது. அதன் வருமானத்தால் சந்நியாசியின் விருப்பப்படி அறப்பணிகளாவது நிறுவச் சொல்லலாம் என்றால் தாம் முன்னால் சொன்னது பொய்யென்று ஒப்புக்கொள்ள வேண்டியதாகிவிடும். கிளாவிருந்தாவை அவள் இஷ்டப்படியே விட்டால் மலையூரும் அவருக்குக் கிடைக்காமல் போய்விடும். நியாயமான முறையில் அவள் சம்மதத்தோடு மலையூர் கிடைக்கும் என்ற நம்பிக்கையும் இல்லை. அது எப்படியாவது தன் மகனுக்குச் சேரும்படி செய்ய வேண்டும் என்று எண்ணினார்.

அமாத்யா, யாருடனும் அதிகமாகப் பழகாமல் ஊமையாக இருக்கும் இயல்பும் உடையவர். போக்கிரித்தனத்தில் தம் தமையன் திவானைவிட ஒரு பங்கு மிஞ்சியவராகவே இருந்தார். மாதவனின் அடாத செயலால் அவர் அதிகமாகக் கலங்காமல் இருந்ததற்கும் அதுவே காரணம். ஈவு இரக்கம் இல்லாதவரும், சூழ்ச்சிகள் செய்யும் கடின நெஞ்சமும் உள்ளவர். அவர் மூளை இயந்திரத்தைப்போல இயங்கி வந்தது. அதன் சுழற்சியில் அகப்பட்டு நசுங்குவது கரும்புக் கட்டையானாலும் சரி, பச்சிளம் குழந்தையானாலும் சரி எல்லாம் அவருக்கு ஒன்றுதான்.

இதுவரை அவர் கிளாவிருந்தாவைப்பற்றிக் கொண்டிருந்த கருத்து, பாட்டனாரால் அதிகச் செல்லம் கொடுக்கப்பட்டு வளர்ந்த முதிர்ச்சியில்லாத ஒரு குழந்தை என்பது தான். அவளுடைய அதி அற்புத அழகையோ, பண்பாட்டையோ அவர் மனப்பூர்வமாக ஒரு நாளும் மெச்சியவர் அல்ல.

அவருக்குக் கல்வி ஞானம் கிடையாது. காதல் மயக்கம் கொள்ளக்கூடியவரும் அல்ல. மாதவன் ஜாதகமும் கிளாவிருந்தாவின் ஜாதகமும் பொருந்தி, அவன் அவளை மணந்து சந்நியாசியின் சொத்தை அடையாதது பெரிய துர்பாக்கியமே என்று கருதினார். ஆனால் நடக்கக் கூடாதனவற்றை நினைத்து வீண் கவலைப்பட்டு மாய்கிறவர் அல்ல அவர். ஆகவேதான் அவளைத் தன் தமையன் மணப்பதில் ஆர்வமும் ஒத்துழைப்பும் காட்டினார். எப்படியாவது முடிவில் தமையனார் சொத்தும் கிளாவிருந்தாவின் சொத்தும் தன் குடும்பத்துக்கே வந்து சேரும் என்ற ஒரு குருட்டு நம்பிக்கையில் அப்படிச் செய்தார்.

ஆனால் இந்தப் பெண்ணின் பிடிவாதத்தை அவர் சற்றும் எதிர்பார்க்கவில்லை. பாட்டனாரின் கடைசி விருப்பத்தைத் தன் ஸ்திரீதனச் சொத்தைக்கொண்டு நிறைவேற்றவேண்டும் என்று அவள் நியாயமான கோரிக்கை எழுப்பியது அவருக்குக் கிலியூட்டியது. அந்தச் சொத்தை அடைந்துவிடுவதற்கான பல திட்டங்கள் அவர் மனதில் உருவாவதும் தகுதியற்றனவையாகக் கருதப்பட்டு அழிவதுமாக இருந்தன. சில ஆபத்தாகத் தோன்றின. சில வெளியரங்கமாக கௌரவத்தைப் பாதிப்பனவாக இருந்தன. முடிவில் அவருக்காக முதலில் தோன்றாமல் கமலாபாய் சொல்லித் தோன்றிய ஒரு திட்டம் பல கோணங்களிலிருந்து பார்த்தும் மிகச் சிறந்ததாக இருந்ததால் தேர்தெடுக்கப்பட்டது. மிகச்சிறந்தது, மிக எளிதானது. குடும்ப புகழை உலகத்தோரிடையே உயர்த்தக்கூடிய மகத்துவம் வாய்ந்தது. முட்டாள் பெண் கமலாபாய் மூலமாக அல்லவா அந்தத் திட்டம் தனக்குத் தோன்றிற்று என்று அமாத்யா சற்று வெட்கமும் பட்டுக்கொண்டார்.

ஆம், அது தான்வழி. சோதிடம், மாந்திரீகம் இவற்றையும் மீறி திவானின் உயிர் மெதுவே பிரிந்து கொண்டிருந்தது. உடல் நலத்தில் எந்தவிதமான அபிவிருத்தியும் தென்பட வில்லை; இன்னும் சில வாரங்களுக்குள் மரணமும் இருக்கும் என்பதைக் கண்டார். அவர் இறந்ததும் அவர் மனைவி சதியாகிவிட்டால் அவர்கள் இருவருடைய சொத்துக்களும் தம் மகனுக்குச் சேர்வதும் அல்லாமல் குடும்பப் புகழும் பிரம்மாண்டமான அளவில் உயர்ந்துவிடும்.

ஒருவேளை அந்தப் பெண்ணும் கூட அதை விரும்பினாலும் விரும்பலாம். உணர்ச்சிக் குவியலாகத் தெரிகிறாள். வானத்தில் மிதப்பது போன்று விசித்திரமான விநோதமான நினைப்புகள் உள்ளவள். அவளாகவே அதை வரவேற்றுவிட்டால் விஷயம் எளிதில் முடிந்துவிடும்.

ஆனால் அவளுக்கு அதில் மனம் இல்லையானால், எளிதில் உடன்படமாட்டாள். அப்படியானால் அவளைப் பலவந்தப்படுத்தவேண்டும். இனி காலம் தாழ்த்த முடியாது. மடமட வென்று காரியங்களைக் கவனித்து, திட்டத்தைச் சரிவரமுடிக்க வேண்டும். அண்ணா எந்த நிமிடமும் காலமாகிவிடலாம்.

அண்ணாவின் வீட்டில் சாரதாவைத்தவிர அவளுக்கு வேண்டியவர்கள் யாரும் இல்லை. எந்த உதவிக்கும் அவள் சாரதா வைத்தான் நாடுவாள். அவளுடைய உறவினரோடு தொடர்பு வைத்துக்கொள்ள வேண்டுமானாலும், வெளி உலகத்தாரிடமிருந்து

செய்தியோ ஆலோசனையோ பெற வேண்டுமானாலும் சாரதா தான் சென்றுவருவாள். ஆகையால் ஏதாவது சாக்கையிட்டு முதலாவது சாரதாவை அந்த வீட்டைவிட்டே அப்புறப்படுத்தியாகவேண்டும். தஞ்சையில் கிளாவிருந்தாவுக்குத் தாய்வழியிலும் பாட்டி வழியிலுமாக வெகு சில உறவினர்களே இருந்தனர். அவர்களும் செல்வாக்குடன் இல்லை. ஆகவே அவர்களைக் குறித்துப் பயப்பட வேண்டியதில்லை என்று தீர்மானித்தார். ஆயினும் உடன் கட்டையேறுதல் அந்த உறவினர் யாருக்கும் முன்கூட்டியே தெரியாவண்ணம் ஒழுங்கு செய்யவேண்டும். அவள் எரிந்து சாம்பலாகி, இனி ஒன்றும் செய்யமுடியாது என்ற கட்டத்தில் தான் அவர்களுக்குத் தெரியவேண்டும்.

அவள் சதியாக விரும்பவில்லையெனில் உதவிக்கு வேறு யாரை நாடுவாள்? மாதவன் இருக்கிறானே! காதல் வயப்பட்ட அந்த அசட்டுப்பிள்ளை அவளுக்கு உதவி செய்ய விரைந்துவிடக் கூடாதே. சாதாரணமாக மாதவன் தம் சொல்கேட்டு நடப்பவன்தா னென்றாலும் இந்தச் சந்தர்பத்தில் அவன் எப்படி நடந்துகொள்வான் என்று சொல்லமுடியாது. ஆகையால் அவனையும் அப்புறப்படுத்தியாக வேண்டும்.

சூழ்ச்சி தீவிரமாகச் சுழன்று கொண்டு இருக்கும்போதே, திடீரென அவருக்கு வேறு எண்ணமும் உதயமாயிற்று. அது அவர் எண்ண ஓட்டத்தை வேறு வேறு சுழலில் திருப்பி விட்டது. அந்தப் பெண் கணவனுக்குத் துரோகம் செய்யாவிட்டாலும் அழகிய இளைஞன் ஒருவனின் காதலை அறவே வெறுக்கவும் இல்லை என்று அவருக்குப்பட்டது. அது இயற்கைதானே என்றும் சமாதானம் செய்து கொண்டார். அப்படியானால் அவள் கணவன் இறந்தபிறகு இந்த முறையில்லாத காதலின் மூலமாக அவள் சொத்தைக் கவர்ந்துவிட முடியாதா என்று தோன்றிற்று.

பெண்களின் கற்பைப்பற்றி அமாத்யா மிகவும் தாழ்ந்த கருத்துக் கொண்டிருந்தார். அவர் என்றுமே, காதலில் மாதரைப் புகழ்ந்து பாடியவர் அல்ல. அப்படிச் செய்பவர்களைக் குறைவாகவே மனதில் மதிப்பிட்டு வைத்திருந்தார்.

அரசியல் அரங்கத்தின் சூழ்ச்சியில் இறங்கி பணம், பதவி, புகழ் இவற்றைத் தேடுவதுதான் ஆண்மையான தொழில் என்பது அவர் எண்ணம்.

தமது மூத்த மகனே இப்படிப்பட்ட போக்கு உள்ளவன் என்பதை அவர் முதல் முதலாக அறிந்தபோது திடுக்கிட்டார். மன்மதனின் உபாசகர்கள் சற்று விசித்திரமாகத்தான் நடந்து கொள்வார்கள். விவேகமான நடத்தையை அவர்கள் எதிர்பார்க்க முடியாது. அந்தப் பெண்ணோவெனில் பழங்காலக் கதைகளையும் காதல் கவிதைகளையும் ஏராளமாகப் படித்துவிட்டு விநோதமான கருத்துக்கள் சேகரித்து வைத்திருக்கிறாள். சுயமாக வேறு சிந்தனை பண்ணுகிறாள். மகனும் இசையிலும் மற்றும் லலித கலைகளிலும் ஈடுபாடு கொண்டவன். அவளைப் போலவே நடைமுறைக்கு ஒவ்வாத கருத்துக்கள் உள்ளவன். அவளோடு சேர்ந்து அவனும் அவளைப்போல் பிடிவாதக்காரனாக மாறிவிடலாம். இப்படிப்பட்ட பண்புகள் உள்ள இருவர் ஒன்று சேர்ந்து இணைந்தால், அவர்கள் நம்மை எதிர்த்து விடுவார்கள் நாம் போட்ட திட்டத்தையும் கவிழ்த்து விடுவார் மேலும் அவர்களை இணைக்க அவர் முயன்றால் உலகம் அவரை அவதூறு செய்யும். தம் எதிரிகளுக்குப் பிடிகொடுத்தது போல் ஆகிவிடும். இந்தத்திட்டத்தில் வெற்றி நிச்சயம் என்று சொல்வதற்கில்லை என்று தோன்றியதால் அதைக் கைவிட்டுவிட்டு, பையனைப் பட்டுக்கோட்டைக்கு அனுப்பி விடுவது என்று முடிவு செய்தார். மற்றும் நடக்க வேண்டிய காரியங்களைக் கவனிப்பதற்கு தம் மனைவியால் உதவி செய்ய இயலாது என்று உணர்ந்தார். சோனாபாய் அவரிடம் எப்பொழுதும் பக்திசிரத்தையுடன் விசுவாசமாக நடந்துகொண்டு அவருக்கு நான்கு ஆண் பிள்ளைகளையும் இரண்டு பெண் பிள்ளைகளையும் பெற்றிருந்தாள். இப்பொழுதெல்லாம் விரதம் அனுஷ்டிப்பதிலும் பக்தி சிரத்தையான காரியங்களிலும் பெரும்பாலும் நேரத்தைச் செலவிட்டாள். பெண் பிறவி எடுத்ததே தீவினைப்பயன் என்பது அவள் கொள்கை.

அந்தப் பாவ ஆத்மாவைக் கரையேற்றுவதற்கான காரியங்களில் மனதைச் செலுத்தி வந்தாள். குடும்பச் சொத்து விஷயங்களிலும், கணவனின் அபிலாஷைகளிலும் அவள் அக்கறை கொண்டதே இல்லை. அவர் திவானாகாதது பற்றி கூட அவள் வருந்தவே இல்லை. குடும்பத்தின் உலகாயத பொருளாதார விஷயங்களை அவரும், ஆத்மார்த்த காரியங்களை அவளும் கவனித்துக் கொள்ள வேண்டும் என்று வேலைப் பாகுபாடு செய்து கொண்டது போல இருந்தது அவர்கள் தாம்பத்தியம். அவர்கள் இயல்புக்கும் இந்தப் பாகுபாடு ஏற்றதாகவே இருந்தது.

ஒரகத்தி உடன்கட்டை ஏறினால் அது மிக உத்தமான செயல் என்று தன் மனைவி கருதுவாள் என்பது அவருக்குத் தெரியும். சதியாவதற்குக் கொடுத்து வைக்க வேண்டாமா என்ற ரீதியில்தான் எண்ணுவாள். தானும், தன் கணவன் ஒரு வேளை தனக்கு முன்னால் சுவாமி, அப்படி நடந்து விடக்கூடாது. போய்விட்டால் சதியாகி விடுவதாக அடிக்கடி சொல்லி இருக்கிறாள். மோட்சத்துக்குச் செல்லக் கடவுள் பதிவிரதைகளுக்குக் காட்டியிருக்கும் குறுக்கு வழிதான் சதி; ஆதலால் அவர்கள் அதை அலட்சியம் செய்யலாகாது என்பது அவள் அபிப்பிராயம். ஆனால் கிளாவிருந்தா சதிக்கு இணங்கவில்லையானால் அவளைக் கட்டாயப்படுத்தும் செயலுக்கு தம் மனைவி உடந்தையாக இருக்கமாட்டாள் என்பது அவருக்குத் தெரியும். ஆதலால் கிளாவிருந்தாவின் மனதை அறியவும், அவள் இருமனதாய் இருந்தால் நயமாய்ப் பேசி அவள் மனதைத் திருப்பி உடன்கட்டைக்குச் சம்மதிக்குமாறு செய்யவும் மாத்திரமே தம் மனைவியைப் பயன்படுத்த வேண்டும் என்று தீர்மானித்தார். ஆனால் அந்தப் பெண் தாம் விரிக்கும் வலையில் விழாது போனால், பின் கமலாபாயின் ஒத்துழைப்பால் எப்படியும் திட்டத்தை நிறைவேற்றிவிட வேண்டும். அதற்குள் தம் மகனையும் பணிப்பெண் சாரதாவையும் உடனே அப்புறப்படுத்தியாகவேண்டும் என்றும் திட்டமிட்டார்.

இப்படியாக, பொறுப்பில்லாத மகன் அந்த அபலையின் உடலையும் உள்ளத்தையும் தன் இன்பத்துக்காகக் கறைப்படுத்த கனவு கண்டு கொண்டிருக்கும்போது, தந்தையானவர் அவற்றைத் தம் ஆதாயத்துக்காக அழித்தேவிட திட்டம் வகுத்துக்கொண்டிருந்தார். மனிதனைச் செயல்பட வைப்பது இரண்டு: ஒன்று பெண், அடுத்தது பொன் என்ற கூற்று மிக உண்மையானது. ஆனால் அமாத்யாவைப் போன்ற மனிதர்கள் உலகத்தில் எந்த நாட்டிலும் மிகக் குறைவாகவே இருக்கிறார்கள் என்பதையும் மறக்கலாகாது.

**தொடரும் ..**

● பதிப்பாசிரியர்




● **J. Austin Ben Das**
Research Scholar
University of Madras
jaustinben@gmail.com

# திருநெல்வேலி பகுதியில் சமீபத்தில் கண்டுபிடிக்கப்பட்ட தொல்லியல் தளங்கள்

தொல்லியல் என்பது பொருள் எச்சங்கள் மூலம் மனித கடந்த கால அறிவியல் ஆய்வு ஆகும். தொல்லியல் வரலாற்றின் பல்வேறு அம்சங்களைப் புரிந்துகொள்ள உதவுகிறது. மக்கள் உருவாக்கிய அல்லது மாற்றியமைத்த எதுவும் தொல்பொருள் பதிவின் ஒரு பகுதியாகும்.

தொல்பொருளியல் நமது பகிரப்பட்ட மனித பாரம்பரியத்தை பாராட்டவும் பாதுகாக்கவும் உதவுகிறது. இது கடந்த காலத்தைப் பற்றி நமக்குத் தெரிவிக்கிறது, நாம் எங்கிருந்து வந்தோம் என்பதைப் புரிந்துகொள்ள உதவுகிறது, மேலும் மக்கள் எவ்வாறு வாழ்ந்தார்கள், சவால்களை சமாளித்தார்கள் மற்றும் இன்றுள்ள சமூகங்களை எவ்வாறு வளர்த்தார்கள் என்பதைக் காட்டுகிறது.

எச்சங்கள் தொலைந்து போகவும், புதைக்கப்படவும் மற்றும் மறக்கப்படும் போக்கைக் கொண்டுள்ளன, எனவே தொல்லியல் துறையானது பகுதியளவு எச்சங்களை மீட்டெடுப்பதற்கான பல முறைகளை உருவாக்கியுள்ளது. இது மற்ற துறைகளில் இருந்து தொழில் நுட்பங்கள், முறைகள் மற்றும் கோட்பாடுகளை கடன் வாங்கி தழுவியுள்ளது, ஆனால் அவற்றை அதன் சொந்தமாக்கியது. இது அதன் சொந்த ஆய்வு முறைகள் மற்றும் அதன் தனித்துவமான அகழ்வாராய்ச்சி முறைகளை உருவாக்கியுள்ளது. தொல்பொருள் அகழ்வாராய்ச்சி அதன் சொந்த கோட்பாட்டு அடிப்படையைக் கொண்டுள்ளது, இது பெரும்பாலும் பாடப்புத்தகங்களில் முறையாக அமைக்கப்படுவதை விட அகழ்வாராய்ச்சியிலிருந்து அகழ்வாராய்ச்சிக்கு வாய் வார்த்தையாக அனுப்பப்படுகிறது. கூடுதலாக, தொல்பொருள் எச்சங்களை ஆய்வு செய்வதன் மூலம் கடந்த காலத்தின் விளக்கத்திற்கான அதன் சொந்த கோட்பாட்டு அடிப்படையை ஏற்றுக்கொண்டு, தழுவி மற்றும் உருவாக்கியது.

### மெகாலித்திக் கலாச்சாரம்

தற்போதைய தமிழ்நாடு மாநிலத்திலும் திருநெல்வேலி பிராந்தியத்திலும் உள்ள தொல்லியல் வணிக நலன்கள் மற்றும் ஐரோப்பாவின் அருங்காட்சியகங்களில் காட்சிப்படுத்துவதற்காக காலனித்துவ குழுக்களால் செயல்படுத்தப்பட்டது.

1872 ஆம் ஆண்டில், பெர்குசன் 'ருடே ஸ்டோன் மானுமென்ட்ஸ் இன்ன ஆல் காண்ட்ரிஸ்: தெயர் ஏஜ் அண்ட் யுசெஸ்' என்ற தலைப்பில் தனது சிறந்த படைப்பை வெளியிட்டார். இது முதலில் அறிஞர்களின் கவனத்தை ஈர்த்தது. பாபிங்டன் 1823 ஆம் ஆண்டில் 'டிசிகிரிபிஷன்ஸ் ஒப்பி தி பாண்டு கூலிஸ் இன்ன மலபார்' என்ற தனது படைப்பை வெளியிட்டிருந்தாலும், பெர்குசனின் மெகாலித்கள் பற்றிய பணி அதன் பரந்த நோக்கம் மற்றும் ஒருங்கிணைந்த அணுகுமுறையின் காரணமாக இன்னும் ஒரு அடையாளமாக கருதப்படுகிறது.

19 ஆம் நூற்றாண்டின் கடைசி காலாண்டில், ஆண்ட்ரியாஸ் ஃபெடோர் ஜாகோர் ஆதிச்சநல்லூரின் உன்னதமான தளத்தை முதலில் தோண்டினார். மெட்ராஸ் பிராந்தியத்தில் விரிவான ஆய்வுகள் தொடர்ந்தன, இதன் விளைவாக 1882 ஆம் ஆண்டில் ராபர்ட் செவெல் மெட்ராஸ் மாகாணத்தில் உள்ள பழங்கால எச்சங்களின் பட்டியலை வெளியிட்டார். நூற்றாண்டின் தொடக்கத்தில், ராபர்ட் புரூஸ் ஃபுட், மெகாலித்கள் உட்பட பழங்காலப் பொருட்களின் சிறந்த பட்டியலை 1901 ஆம் ஆண்டில் வெளியிட்டார். 19 ஆம் நூற்றாண்டின் பிற்பகுதியில், அலெக்சாண்டர் ரியா தென்னிந்தியாவில் பல மெகாலிதிக் தளங்களை அகழ்வாராய்ச்சி செய்தார். ஆதிச்சநல்லூரின் உன்னதமான தளமும் 1903-04 இல் லூயிஸ் லாபிக் என்பவரால் மீண்டும் தோண்டப்பட்டது. அலெக்சாண்டர் ரியா 1915 ஆம் ஆண்டில் ஆதிச்சநல்லூர் மற்றும் பெரும்பைரிலிருந்து வரலாற்றுக்கு முந்தைய தொல்பொருட்களின் பட்டியலை வெளியிட்டபோது, இந்திய பெருங்கற்கால கலாச்சாரங்களின் குறிப்பிடத்தக்க பல்வேறு மற்றும் தனித்துவமான இயல்புகள் உலகின் முன் வைக்கப்பட்டன.

### ஆதிச்சநல்லூர் - திருநெல்வேலி தொல்லியல் துறையின் விடியல்

பீட்டா அனலிட்டிக் சோதனை ஆய்வகத்தின் ரேடியோகார்பன் டேட்டிங் பகுப்பாய்வுகளின் அடிப்படையில் ஆதிச்சநல்லூரில் உள்ள கலைப்பொருட்கள் கிமு 540 முதல் கிமு



படம் 1: விந்தன் கோட்டையில் மனித எலும்பு எச்சம் கண்டெடுக்கப்பட்டது



படம் 2: விந்தன் கோட்டையில் பானைத் துண்டுகள்



படம் 3: விந்தன் கோட்டையில் ருசெட் பூசப்பட்ட பொருட்கள்

905 வரை பழமையானவை. ஆதிச்சநல்லூர் பல்வேறு இனங்களின் எலும்புக்கூடுகள், தொல்பொருள்-தாவரவியல் எச்சங்கள், உலோகப் பொருட்கள், நகைகள் ஆகியவற்றை வெளிப்படுத்தியுள்ளது.

ஆதிச்சநல்லூர் பகுதியில் மட்டும் இது போன்ற கலைப்பொருட்கள் கிடைப்பது இல்லை. இப்பகுதியில் உள்ள துலுக்கர்பட்டி, சிவகலை, மாங்குடி, அய்யனார்குளம்பட்டி, ஐயரபேரி, சீனோபனையாலபுரம், குற்றாலம், இடிந்தகரை, காகநல்லூர், கரகுளம், கரட்டுமலை, காயல், கிளாநத்தம், கீழ்புத்தனேரி, கொற்கை, மலையடிக்குறிச்சி, மரமங்கலம், மதலம்பரை, முரப்பநாடு, நாட்டார்குளம், பறம்பு, பட்டக்குறிச்சி, பெரியபரம்பு, சாரன்குளம், சுப்ரமணியபுரம், தீர்த்து, தோரணமலை, வாலிபன்பொதை மற்றும் வழுத்தூர் போன்ற பல இடங்களில் கலைப்பொருட்கள் உள்ளன.

தொல்பொருளியலுக்கு முடிவே இல்லை மற்றும் தொல்பொருளியல் எப்போதும் நமது கடந்த காலத்தைப் பற்றிய நமது புரிதலிலும் முன்னோக்கி செல்லும் பாதையிலும் புதிய காட்சிகளையும் வழிகளையும் திறக்கும் வாய்ப்பைக் கொண்டுள்ளது. பெரும் ஆற்றலைக் கொண்ட பிராந்தியத்தின் தொல்லியல் நோக்கத்தை மேலும் மேம்படுத்துவதில், இப்பகுதியை ஆராய்வது மகத்தான சாத்தியமுள்ள பல தளங்களை அடையாளம் காண உதவுகிறது.

**திருநெல்வேலி பகுதியில் உள்ள தொல்பொருள் கண்டுபிடிப்புகள்**

விந்தன்கோட்டை மேற்பரப்பில் மைக்கா செதில்கள், சிவப்பு பாத்திரத் துண்டுகள், கருப்புப் பாத்திரத் துண்டுகள், உடைந்த டெரகோட்டா மூடிகள், பானைத் துகள்கள், புதைகுழி இமைகள், மனித எலும்பு எச்சங்கள், ருசெட் பூசப்பட்ட வர்ணம் பூசப்பட்ட பாத்திரங்கள், ஹாப்ஸ்கோட்ச் ஆகியவை கண்டுபிடிக்கப்பட்டன. இந்த இடத்தில் கல்லறை பொருட்களுடன் பல புதைகுழிகளுக்கு வாய்ப்பு உள்ளது.

ஒரு மண் கோட்டை போன்ற மேட்டில் உடைந்த பானைத் துண்டில் விதைகள், பல்வேறு சிவப்பு மற்றும் கருப்பு பொருட்கள், பளபளப்பான பொருட்கள் காணப்பட்டன. இப்பகுதியை முறையாக ஆராய்ந்து, சம்பந்தப்பட்ட தொல்லியல் துறையினர் அகழ்வாராய்ச்சி செய்தால், மாவட்ட அருங்காட்சியகத்தை நிரப்பும் அளவுக்குப் பொருள்களின் புதையல் கிடைக்கும்.

நமது தொன்மையான வரலாற்றைப் பாதுகாக்க மேற்கூறிய இடங்களில் விரைவில் அகழ்வாராய்ச்சியை அரசு மேற்கொள்ள வேண்டும். வரலாற்றை இழந்தால் அனாதையாகி விடுவோம். நம் முன்னோர்களின் வரலாற்றைக் கற்றுக்கொள்வோம், பாதுகாப்போம், பகிர்ந்து கொள்வோம்.



படம் 4:விந்தன் கோட்டையில் கறுப்புப் பாத்திரத் துண்டுகள்

**மேற்கோள்கள் மற்றும் மேலதிக வாசிப்பு:**


1."Excavations at Adichanallur", Dr. Sathyabhama Badhreenath, Published by The Director General, Archaeological Survey of India, 2021.
2."Pre And Proto History Of Tirunelveli And Thoothukkudi Districts", D. Charlson, University of Madras <http://hdl.handle.net/10603/279912>
3."Tamilnadu Archaeological Perspective", Edited K. Damodaran, Department of Archaeology, Tamil Nadu.
4."A Bibliography On Indian Megaliths", K. S. Ramachandran, Department of Archaeology, Tamil Nadu, 1971.
5."Archaeological Antiquities - A Catalogue", Editor Dr. T. S. Sridhar, Department of Archaeology, Tamil Nadu, 2009.
6."Archaeological Excavations Of India (Volume I)", Dr. S.Vasanthi, V.Ramamurthi, M.Kalaivanan, S.Sreekumar, Department of Archaeology, Tamil Nadu, 2011.
7."Archaeological Excavations Of India (Volume II)", Dr. R. Poonkuntran, K.Sridharan, Dr. S.Vasanthi, V.Ramamurthi, Department of Archaeology, Tamil Nadu, 2011.



## இரா.ஜான் இராஜேந்திரன்

சென்னை




சில ஆண்டுகளுக்கு முன் தம்பி மன்னா செல்வகுமார் அவர்கள், தென் தமிழகத்தில் பணிபுரிந்த மிஷனெரிகள் வரலாற்றையும் திருச்சபைகள் வரலாற்றையும், வாட்ஸ்அப் குழு ஒன்றில் தொடர்ச்சியாக பதிவிட்டு வந்தார். அப்போது தொலைபேசியில் அழைத்து அவரது சிறப்பான முயற்சிகளைப் பாராட்டினேன். அடுத்தகட்டமாக தமிழகம் எங்கும் ஊழியம் செய்த மிஷனெரிகள் வரலாற்றையும் அதற்குரிய ஆதாரங்களையும் புதைபொருள் ஆராய்ச்சி போல தேடி, அவைகளை வெளிச்சத்துக்குக் கொண்டு வரும் முயற்சியில் ஈடுபட்டார். வாட்ஸ்அப் பதிவுகளைத் தொடர்ந்து, திருநெல்வேலி கிறிஸ்தவ வரலாற்றுச் சங்கம் என்று ஒரு சங்கத்தை ஏற்படுத்தி, கிறிஸ்தவ வரலாற்றுச் சுவடுகள் பத்திரிகையையும் வெளியிட ஆரம்பித்தார். இதன் மூலம் நமது மிஷனெரிகளின் சுவிசேஷ ஊழியம், சபை உருவாக்குதல், ஆலயம் கட்டுதல், கல்வி நிறுவனங்கள் மற்றும் மருத்துவமனைகள் ஏற்படுத்துதல் ஆகிய சமூக முன்னேற்ற முன்னோடிப் பணிகளைக் (உணஷ்லி–ஐஊஊஷெஷ்ஐஆ நிலிஷெவு) குறித்து அநேகர் தெரிந்து கொள்ள மாபெரும் வாய்ப்பாக அமைந்தது. "ஒவ்வொரு கிறிஸ்தவனும் திருச்சபை வரலாற்றை தெரிந்திருக்க வேண்டும்" என்கிற வாரலற்றுச் சங்கத்தின் உயரிய நோக்கம் பாராட்டத்தக்கது. கிறிஸ்தவ வரலாற்றுச் சுவடுகள் பத்திரிகை 3–வது ஆண்டிற்குள் பிரவேசிக்கும் இந்த நேரத்தில். இப்பணி மேலும் சிறக்கவும், வளர்ந்து பெருகவும், இதுவரை யாரும் அறிந்திராத புதிய புதிய சரித்திரங்கள் வெளிவரவும் வாழ்த்துகிறேன் !


## குட்டி ஜாஸ்கர்

பேராசிரியர் ,நாசரேத்




பூர்வ நாட்களை நினை தலைமுறை தலைமுறையாய் சென்ற வருடங்களை கவனித்துப் பார் என்ற அருள்வாக்குக்கிணங்க என் அன்பின் வாழ்த்துக்களை தெரிவித்துக்கொள்கிறேன்.கிறிஸ்தவ வரலாற்று சுவடுகள் என்ற ஆய்வுக் கட்டுரை மலர் கடந்த இரண்டு ஆண்டுகளாக நமது கைகளில் கிடைக்கிறது. அதில் வெளி வரும் ஒவ்வொருக்கட்டுரைகளும் பல நூற்றாண்டுகளுக்கு முன் அதாவது மிஷனெரிகள் வாழ்ந்த காலத்தில் இருந்த சூழ்நிலைகள் நினைவூட்டப்படுகிறது. நாம் அறிந்தும் அறியாததுமான பல நிகழ்வுகளை தேடி கண்டு பிடித்து கட்டுரை வடிவமாக்கி 'வரலாற்று சுவடுகள்' என்ற தலைப்பில் வெளியிட்டு ,நம் பின் சந்ததியார் அறிந்துகொள்ளும் வண்ணம் புத்தக வடிவில் தரும் ஒவ்வொருவருக்கும் நான் மிகவும் கடமைப்பட்டுள்ளேன். அத்தோடு திருநெல்வேலி கிறிஸ்தவ வரலாற்றுச் சங்கத்தின் 'கிறிஸ்தவ வரலாற்று சுவடுகள்' இதழின் மூன்றாம் ஆண்டுவிழாவிற்கு வாழ்த்துகளும் பாராட்டுகளும் தெரிவித்துக்கொள்வதில் பெரும் மகிழ்ச்சி அடைகிறேன்.தேவனுக்கே மகிமை உண்டாவதாக.



# மறையாத மாணிக்கம்..

திருநெல்வேலி திருமண்டலத்தில் கீரிடங்களாக விளங்கும் சிறிதும் பெரிதுமான பல நிறுவனங்களில், பாளையங்கோட்டை சாராள் டக்கர் பெண்கள் கல்லூரி சிறப்புமிக்கவற்றில் ஒன்று. கை,கால் உபயோகமற்றுப் போன சாராள் டக்கர் என்ற மாது, சி.எம்.எஸ் செயலர் கனம் ஜாண் ற்றக்கர் ஐயரின் சகோதரி. ஊனமுள்ளவளாயினும் தன் நிலை குறித்துத் தன்னிரக்கங் கொண்டு மனம் வெதும்பாமல், அந்நிலையிலும் கர்த்தருக்குள் மகிழ்ச்சியாய் இருந்து வந்தாள் சாராள். விசுவாசத்தில் வல்லவள். ரட்சிப்பின் நிச்சயத்தை உடையவளாய், நித்திய ஜீவனை நிலையற்ற இவ்வுலக வாழ்க்கையிலேயே நிரம்பவும் அனுபவித்தவள். இரட்சகரிடத்தில் விசுவாசமுள்ளவளாய் இருந்தபடியால், அவளுள்ளத்திலிருந்து ஜீவதண்ணீருள்ள நதிகள் ஓடின. அப்புனிதவதியின் மூலம் கிறிஸ்து பெருமானை அறிந்து கொண்ட அவளுடைய சிநேகிதிகளும் அநேகர்.

சென்னை சி. எம். எஸ். கமிற்றியின் செயலராக இருந்த அவளது சகோதரனான ஜாண் ற்றக்கர் ஐயரின் மூலம், திருநெல்வேலியில் நடந்த சி. எம். எஸ். ஊழியத்தைப்பற்றி அவள் அநேக செய்திகளை கேள்விப்பட்டிருந்ததினால், அவ்வூழியத்தை, அதிலும் குறிப்பாகப் பெண்களுக்குள் செய்யப்பட்ட ஊழியத்தைச், சிலாகித்துத் தன்னாலான உதவிகளைச் செய்ய விரும்பினாள். அக்காலத்தில் கடாட்சபுரத்தில் ஒரு சி. எம். எஸ். பெண்கள் ஆசிரியப் பயிற்சிப் பள்ளி துவக்கப்பட்டது. (1843). அதை அறிந்த சாராள், தன் சிநேகிதிகளின் உதவியால் பணம் சேகரித்து, இருபது பவுண் அனுப்பினாள். அதுமுதல் அடிக்கடி தன்னாலான உதவிகளைத் திருநெல்வேலி ஊழியத்திற்கு அனுப்பி வந்தாள்.

அவ்வுத்தம பக்தை 1857-ம் ஆண்டிறுதியில் இவ்வுலக வாழ்வை நீத்து இரட்சகரின் சமூகம் சேர்ந்தாள். ஆறாத் துயரம் கொண்ட அவளது சிநேகிதிகளில் சிலர் தங்கள் அன்புத் தோழியின் ஞாபகார்த்தமாக இந்தியாவில் நடைபெற்ற சி. எம். எஸ். ஊழியத்தின் சார்பில், அங்கு பெண்கள் கல்வி சம்பந்தப்பட்ட நிரந்தரமான ஒரு ஸ்தாபனம் நிறுவப்படுவது நலமென்று தீர்மானித்தனர். அதற்கிணங்க, அவர்கள் சாராளை அறிந்தவர்களிடம் பலரிடம் சென்று, தங்கள் திட்டத்தைக் கூறினதும், அம்மக்கள் தங்கள் மனதுக்குத் தோன்றிய தொகையைத் தந்து உதவினர். அத்தொகையுடன் தாங்களும் தங்களாலானதைக் கொடுத்து 268 பவுன் 17 ஷில்லிங் (அந்நாளைய நாணய மாற்று முறைப்படி சுமார் ரூ. 2700) சேர்த்தனர். பின், தங்களில் மூவரை ஒரு குழுவாக நியமித்து அக்குழு, சி. எம். எஸ். சங்கத்தாருடன் தொடர்புகொண்டு, ஆவன செய்ய வேண்டுமென்று பணித்தார்கள். மேரியா C. சைல்டர்ஸ், ஸொப்வையா டீக்கன், யோவன்னா கார் என்ற மூவரும் குழுவின் உறுப்பினர். அக்குழுவினர், சாராளின் சகோதரனும் சி. எம். எஸ். சங்கத்தின் செயலர்களிலொருவருமான ஜாண் ற்றக்கர் ஐயருக்கு கீழ்க்கண்ட கடிதத்தை எழுதினர்.

**அன்புள்ள திரு ற்றக்கர்**,

பெருமதிப்புள்ள உங்கள் பிரிய தங்கை, தன்னுடைய ரட்சகர்மீது கொண்டிருந்த வாஞ்சைமிக்க பற்றையும், மிஷன்களுக்காக அவள் எடுத்துக் கொண்ட தளரா முயற்சிகளையும், எல்லா மனுஷர் மேலும் வைத்திருந்த அன்பு கலந்த அனுதாபத்தையும்பற்றிய ஞாபகம் மறைந்துவிடக் கூடாதென்பது அவளை அறிந்தவர்களுக்குள்ளிருக்கும் பெரிய ஆசை. சி. எம். எஸ். யை சேர்ந்த மிஷன் வேலையில் நீங்கள் அதைப் பயன்படுத்திக்கொள்வதற்காக, கீழே கொடுக்கப்பட்டிருக்கிற பட்டியலில் பெயர்கள் எழுதப்பட்டவர்கள், தாங்கள் தங்களுக்குள் சேர்த்த தொகையான 268 பவுன் 17 ஷில்லிங்கையும் உங்களிடம் கொடுக்கும்படி எங்களை நியமித்திருக்கிறார்கள். அவளுக்கு ஒரு நிரந்தர ஞாபகச் சின்னத்தை ஏற்படுத்தவேண்டுமென்பதே அவர்களுடைய விருப்பம் என்பதை நாங்கள் அறிவோம். ஆகையினால் எந்த விதமான காரியத்துக்கு உதவி செய்வது அவளுடைய விருப்பமாயிருக்கும் என்று நீங்கள் அறிவீர்களா, அந்த ஒரே காரியத்துக்காக மட்டும் இந்தத் தொகை பயன்படுத்தப்படவேண்டும். இன்றைய நிலைமையில் எங்கள் எண்ணங்கள் இந்தியாவைப் பற்றியவையாய் இருக்கின்றன; அவளுடைய எண்ணங்களும் அவ்வாறே இருந்திருக்கும் என்று நீங்களும் நினைக்கக் கூடுமென்று நாங்கள் எண்ணுகிறோம்.

பணம் சேகரிக்கும் எங்கள் முயற்சியை அதில் உதவ விரும்பக் கூடியவர்கள் அனைவருக்கும் தெரியப்படுத்தப் பிரயாசப்பட்டுள்ளோம். அப்படிப்பட்டவர்கள் எல்லாரையும் கண்டுபிடிக்க அதிகப் பிரயாசமெடுத்துக்கொண்டோம் எனினும், சிலர் விடப்பட்டிருப்பரோ என்று அஞ்சுகிறோம். அவளை மதித்து நேசித்தவர்கணைவருக்கும் இந்நோக்கத்தில் உதவி செய்ய வாய்ப்புக் கொடுக்க விரும்பி, குறைந்த தொகையாகிய ஐந்து பவுண் தான் கேட்டோம். இந்தச் சட்டத்தை இரண்டொருவர் மீறியிருக்கிறதைப் பட்டியலில் நீங்கள் காணலாம். உங்கள் பதில் கிடைத்ததும், அதைப் பணம் கொடுத்தவர்களுக்குத் தெரிவிப்போம். உங்களுக்கும் உங்களுடைய மற்ற தங்கையர்க்கும் எங்களது நிரம்பிய அனுதாபங்களுண்டு என்பதை நீங்கள் சந்தேகிக்கத் தேவையில்லையென்று நிச்சயமாய்க் கூறிக்கொள்ளும்,.



ற்றக்கர் ஐயருக்கு இக்கடிதம் புது வருஷத் தினத்தன்று கிடைத்தது. எனவே மிகுந்த மகிழ்ச்சியுடன் அன்றே திருமதி சைல்டர்ஸுக்குப் பதில் எழுதி, அக்காரியத்தைப் பற்றிச் சிந்திப்பதாகத் தெரிவித்தார். பின், ஜெபத்துடன் நன்கு யோசனை செய்து அவ்வம்மையருக்கு அவர் எழுதினது.

**அன்புள்ள திருமதி சைல்டர்ஸ்,**

இந்தியாவுடனும் சி. எம். எஸ். சங்கத்துடனும் சம்பந்தப்பட்ட மூன்று நான்கு நண்பர்களுடன் ஆலோசனை செய்தபின், ஞாபகார்த்தம் நிறுவவேண்டுமென்று விரும்புகிற அந்த நண்பர்களின் ஆசையை எந்த முறையில் நன்கு நிறைவேற்றலாம் என்பதுபற்றியும் எங்கள் நேசத் தங்கையின் ஞாபகச் சின்னமாயிருக்கத்தக்கதான எந்த நல்ல விஷயத்தில் அப்பணத்தைச் செலவிடலாம் என்பது பற்றியும், நானும் என் சகோதரிகளும் நினைப்பதை உங்களுக்கு இப்பொழுது தெரிவிக்கக் கூடியவனாயிருக்கிறேன்.

'சாராள் ற்றக்கர் பெண்கள் பயிற்சி ஸ்தாபனம்' (The Sarah Tucker Female Training Iostitution) என்னும் பெயர் கொண்ட சுதேசக் கிறிஸ்தவப் பெண்கள் ஆசிரியப் பயிற்சிப் பள்ளியைத் திருநெல்வேலியில் நிறுவுவதற்கு அப்பணத்தைப் பயன்படுத்தலாம் என்று நாங்கள் தீர்மானிக்கிறோம். அதை சி. எம். எஸ். சங்கம் ஒப்புக்கொள்வதுடன், அந்நிறுவனத்தை நடத்தவும் சம்மதிக்க வேண்டும். மிகவும் நேசிக்கப்பட்ட எங்களது தங்கையின் மனதுக்கும் உணர்ச்சிகளுக்கும் ஏற்புக்கும் ஏற்றதாக, நடைமுறையில் சாத்தியமாகக் கூடிய வேறெந்தக் காரியத்தையும் விட இதுவே மிகவும் பிரியமானதாகவிருக்கக்கூடும் என்றெண்ணுகிறோம். சி. எம். எஸ். சங்கத்திலிருந்து உதவித் தொகை எதுவும் பெறாமல், இப்பணத்தைமட்டும் கொண்டு நிறுவக்கூடிய நினைவுச்சின்னம் வேறெதுவுமிருப்பதாக எங்களுக்குத் தோன்றவில்லை. ஸ்தாபனமொன்றை நிறுவுவதற்குமட்டும் அது போதுமானதேயன்றி, அந்நிறுவனத்தைத் தாங்கி நடத்துவதற்குப் போதாது. நாங்கள் நினைக்கிற இந்தத் திட்டத்தில், உங்கள் பணம் ஒரு நிறுவனத்தைத் தோற்றுவிக்கப் பயன்பட்டுள்ளது என்ற திருப்தி உங்களுக்குக் கிடைக்கும். திருநெல்வேலித் திருச்சபைக்கும், இந்தியாவுக்குமே, நிரந்தரமானதும் திரளானதுமான நன்மைகளைதரும்பெரியதோர்நிறுவனத்தின் அற்பமான ஆரம்பமாகக், கர்த்தருடைய ஆசீர்வாதத்தினால், இது விளங்கும். எங்கள் அன்புத் தங்கையின் பெயரைத் தாங்கியதாக அது விளங்கிவருமாதலால், உங்கள் கடிதத்தில் நீங்கள் கூறுகிற நிபந்தனைகள் எல்லாவற்றையும் இத்திட்டம் நிறைவேற்றுகிறதாகத் தோன்றுகிறது. இந்தியாவிலுள்ள கிறிஸ்தவப் பெண்களுக்குக் கிறிஸ்தவ வாழ்க்கைத் தத்துவங்களிலும், நற்பழக்க வழக்கங்களிலும் முழுமையான பயிற்சியளிக்கும் கல்வியே இப்போதைய பெருந்தேவை யென்பது என்னுடைய முடிவான அபிப்பிராயம்.

சி. எம். எஸ். சங்கம் இத்திட்டத்தை ஏற்பர் என்று நான் நம்புவதற்குத் தகுந்த காரணமுண்டு.

**J. ற்றக்கர்.**

இத் தீர்க்கதரிசன நம்பிக்கை எவ்வளவு வெற்றியுடன் நிறைவேறியுள்ளது என்பதை வாசகரும் அறிவர்; வரலாறும் அதற்கு சான்று பகருகிறது.

ற்றக்கர் ஐயர் தன் திட்டத்தை சி. எம். எஸ். சங்கக் கமிற்றிக் கூட்டத்தில் வைத்தார். அக்கமிற்றி பெப்ரவரி 16-ம் நாளில் கூடி, அத்திட்டத்தை நன்கு பரிசீலனை செய்து கீழ்க்கண்ட தீர்மானத்தை நிறைவேற்றினர்.

காலஞ்சென்ற குமாரி ற்றக்கரின் கிறிஸ்தவ சிநேகிதர்களும் அபிமானிகளும், அவர் தன்னுடைய ஆர்வம்மிக்கதும் பயன் மிகுந்ததுமான எழுத்துக்களால் மிஷனெரிச் சேவைக்கு ஆற்றியுள்ள பெரும் பணிகளையும், எங்கும், குறிப்பாகத் தென் இந்தியாவிலும், சுதேசப் பெண்களின் கல்வி அபிவிருத்தியில் அவர் நிறைவேற்றிய தளரா ஊக்கமுள்ள பணிகளையும் நினைவு கூர்வதற்காக, ஒரு நிரந்தர ஞாபகார்த்த நிறுவனத்தை நாட்டவேண்டுமென்று கொண்டுள்ள விருப்பத்தை இக் கமிற்றி இதயப் பூர்வமான அனுதாபத்துடன் பாராட்டி, "சாராள் ற்றக்கர் பெண்கள் பயிற்சி நிலையம்" என்ற பெயருடன் பெண்கள் ஆசிரியைப் பயிற்சிப் பள்ளிக்கூடமொன்றைப் பாளையங்கோட்டையில் நிறுவ வேண்டும் என்ற ஆலோசனையை ஏற்று, குமாரி ற்றக்கரின் நண்பர்கள் சேகரித்துக் கொடுத்துள்ள பணத்தை அதன் கட்டிடத்தைக் கட்டுவதில் பயன்படுத்தவும், கட்டிடங்களைப் பூர்த்தி செய்து, மிஷனின் மற்ற கிளை ஸ்தாபனங்களை இச்சங்கம் எப்படி ஆதரித்து வருகிறதோ அதே போல் இந்நிறுவனத்தையும் நடத்திவரவும் தீர்மானிக்கிறது.

சாராள் ற்றக்கர் பெண்கள் கல்லூரி; பெண்கள் உயர்நிலைப் பள்ளி, ஆசிரியைப் பயிற்சிப் பள்ளி, சாராள் ற்றக்கர் கிளைப் பாடசாலைகள், ஊழியஸ்தானம் பெண்கள் ஆசிரியைப் பயிற்சிப் பள்ளி என்று பலவாறாக விரிந்து செயல்பட்டு வருவதும், பாளையங்கோட்டை செவிடுமையர், அந்நகர் பாடசாலைகளுக்கு ஊற்றுக் கண்ணாய் விளங்கினதுமான சாராற்றக்கர் நிறுவனத்தின் தொடக்க வரலாறு 'மறைந்த மாணிக்கம்' ஆகிவிடக்கூடாதென்ற ஆர்வத்தில் இவ்வளவு விரிவாய் அவ்வரலாற்றை ஈண்டு தந்தோம்.

ஆக்கியோன்

## பேராசிரியர் தே.அ.கிறிஸ்துதாஸ்




## புத்தகம் கிடைக்குமிடம்

- திருநெல்வேலி திருமண்டல புத்தக நிலையம்
- பேராலய புத்தக நிலையம்(CSI), நாகர்கோவில்
- வரலாற்றுச் சங்க அலுவலகம்

**9176780001**

1877ஆம் ஆண்டு திருவிதாங்கூர் சமஸ்தானத்தம் அலெப்பியில் எடுக்கப்பட்ட புகைப்படம். 20வதுக்கும் மேல் வெவ்வேறு சாதிகளைச் சேர்ந்தவர்களை ஒரே இடத்தில் ஒன்றாக அமர வைத்தப் புகைப்படம் என்று மிகுந்த ஆச்சரியத்தோடு இது 1878ஆம் ஆண்டு சி.எம்.எஸ் தலைமை நிர்வாகத்திற்கு இந்தியாவிலிருந்து அனுப்பப்பட்டது. ரெவ். வில்லியம் ஜான்சன் என்ற மிஷினரி இந்தப்படத்தை அனுப்புகிறார். இதில் இருப்பவர்களைப் பற்றி சிறு சிறு குறிப்புகளையும் சேர்த்தே அனுப்புகிறார். மிகுந்த உயர் சாதியரும் அடிமட்டத்தில் இருக்கும் சாதியரும் ஒன்றாக உட்கார வைத்தது பெரிய சாதனையாகப் பார்க்கப்படுகிறது. இதில் பலரும் கிறிஸ்தவர்கள் அல்லது கிறஸ்தவத்தைத் தழுவும் நோக்கத்தோடு இருப்பவர்கள் அல்லது ஆங்கில கல்வி கற்றவர்கள் அல்லது அரசு பணியில் இருப்பவர்கள் என்பது குறிப்பிடத்தக்கது. இது போல் வெவ்வேறு சாதி மக்கள் ஒரே புகைப்படத்தில் இவ்வாறு சேர்ந்து அமர்ந்திருப்பது இதுவே முதலாக இருக்கலாம் என்று கனிக்கப்படுகிறது..

‘அவர்களெல்லாரும் ஒன்றாயிருக்கவும், பிதாவே, நீர் என்னை அனுப்பினதை உலகம் விசுவாசிக்கிறதற்காக, நீர் என்னிலேயும் நான் உம்மிலேயும் இருக்கிறதுபோல அவர்களெல்லாரும் நம்மில் ஒன்றாயிருக்கவும் வேண்டிக்கொள்ளுகிறேன்‘ யோவான் 17:21

Note:- https://manojeben.com/2020/06/21/a-remarkable-group-portrait-of-various-castes-in-aleppey-1877/

அட்டை படம்: ரோடா அலெக்ஸ்

## G-pay (Google Pay) மூலமாக சந்தா நன்கொடை அனுப்ப .....

‘வரலாற்றுச் சுவடுகள்’ – மாத ஆய்விதழுக்கென்று
G-pay(Google Pay) மூலமாக நன்கொடை அனுப்ப விரும்புகிறவர்கள்,
91767 80001 என்கிற இந்த எண் மூலமாகவும் அனுப்பலாம். நீங்கள் சந்தா நன்கொடை அனுப்பிய பின்பு,
அதைக் குறித்த முழு விபரங்களை இதே எண்ணில் தொடர்பு கொண்டோ,
அல்லது இதே எண்ணிற்கு WhatsApp மூலமாகவோ, அல்லது christianhistorical@gmail.com மூலமாகவோ
எங்களுக்குத் தெரியப்படுத்தவும்.

# தென்னாட்டிலுள்ள தேவாலயங்களைத் தேடி ...

சேலம் அஸ்தம்பட்டி C.S.I இம்மானுவேல் தேவாலய போதகசேகர குழுவினர், மற்றும் நண்பர்களாக தென்னாட்டிலுள்ள தேவாலயங்களைப் பார்த்து ஆய்வுசெய்து வர ஒரு வரலாற்று சுற்றுலா தூத்துகுடி, நாசரேத்து, திருநெல்வேலி, கன்னியாகுமரி ஆகிய பகுதிகளுக்கு நாங்கள் மேற்கொண்ட சமயம் கடந்த 2020 ஆம் ஆண்டு ஜனவரி மாதம் 15, 16 ஆகிய தேதிகள் பொங்கல் விடுமுறையை இப்படி பயனுள்ள வழியில் செலவிட்ட நாட்கள் அது.

**நாங்குநேரி :**

திருநெல்வேலியிலிருந்து கன்னியாகுமரி போகும் வழியில், இடையன்குடி தூய திரித்துவ தேவாலய பீடத்தண்டையில் மீளாத் துயில் கொண்டிருக்கும் திராவிடத் தகப்பன், பேராயர்களின் பேராயர். சங்கை இராபர்ட் கால்டுவெல் ஐயரின் கல்லறையை பார்க்கவும், அஞ்சலி செலுத்தவும், மேலும் அந்த தேவாலயத்தில் அவரால் அமைக்கப்பட்ட இசைப்பாடும் மணிகளின் பண்ணிசையைக் கேட்கவும், நாங்கள் ஆவலுடன் பயணித்த வேளையில், நாங்குநேரி (Nanguneri) என்ற ஊரை வந்தடைந்தோம். வரலாற்றுச் சிறப்பு மிக்க இந்த "நாங்குநேரி" வரலாற்றிலும், சமய மற்றும் தமிழ் இலக்கிய வரலாறுகளிலும் சிறப்பான இடம்பெற்றுள்ளது. 108 திவ்ய தேசங்களில் இந்த ஊரும் ஒன்றாம். நான்கு ஏரிகளின் கூர்மையான மேடான பகுதிகளின் சந்திப்பு இடமே இந்த இடமாகும் என்பர் சிலர். அதாவது நான்கு+ கூர் +ஏரி என்பதே "நாங்குநேரி" யானது என்பது அவர்கள் முடிவு. முன்னொரு காலத்தில் பரந்து விரிந்திருந்த ஒரு திருக்குளம் அது நான்கு ஏரிகளாக வளர்ந்து விரிந்தபோது, அதன் நடுவே அமைந்த ஊர்தான் "நாங்குநேரி" அதாவது நான்கு + ஏரி அதேதான் நாங்குநேரி என்பது பிரிதொரு சாரார் கூற்று.

**சிலுவையின் காவலும், வரலாற்றின் சவாலும் :**

நாங்குநேரி என்ற ஊரை அறிந்து கொள்வதற்கு முன்பே சாலையோரத்தில் நாங்குநேரி ஒன்றிய அலுவலகம் (Union Office) எதிரே சாலையும், இருப்புப் பாதையும் (Railway Crossing), சந்திக்கும் இடத்திற்கு சற்று முன்பே ஒரு ஸ்தூபி போன்ற ஒரு நினைவுச் சின்னம் (Memorial) என் கண்ணில் பட்டது. உடனே வண்டியை நிறுத்தச் சொல்லி கூப்பாடு போட்டேன், வண்டி அப்படியும் இரயில் பாதையைக் கடந்தே நின்றது. ஆர்வமுள்ள சிலர் என்னுடன் இந்த வரலாற்று தேடலில், சந்திப்பில், தங்களை இணைத்துக் கொண்டு உதவி செய்தார்கள். சிலுவையைத் தூக்கிப் பிடித்தபடி அந்த ஸ்தூபி கல்லறை சேதமடைந்தும், சிதிலமடையாமல், நின்றது அதிசயமே. செங்கல், சுண்ணாம்பு காரை, கருங்கல் சேர்ந்து கலந்த பழங்கால கட்டுமானம். லேசாகவே நூற்றி இருபது ஆண்டுகளைத் தாண்டியும், நின்று நிலைத்திருப்பது சிலுவையின் காவலா? அல்லது வரலாற்றின் சவாலா?

**கல்லறை சாசன கல்வெட்டு:**

கல்லறையை ஆய்வு செய்து சாசன கல்வெட்டை படித்தோம். முதலில் ஆங்கிலத்திலும், தொடர்ந்து தமிழிலும், கல்வெட்டு வாசகம் 19 ஆம் நூற்றாண்டுத் தமிழில் ...

Sacred to the Memory of Mr.Ved.Jesudos pillai, the most beloved husband of Arputha Muthammal Who died on the 22nd July 1899 aged 41 years. R.I.P.

தஞ்சாவூர் திரசர் மாணிக்கம் பிள்ளை குமாரர் பஷ்டு கிளாஸ் சிவில் அப்பாத்திகிரி வேதமுத்து ஏசுதாஸ் பிள்ளை தன்னுடைய 41 ஆம் வயதில் 1899ஆம் வருஷம் ஜூலை (மீ)மாதம் 22ஆம் (தி) தேதி கர்த்தருக்குள் அமைதலாய் மரித்தார்.

"நீங்கள் மரித்தீர்கள் உங்கள் சீவன் கிறிஸ்துவுடனே கூடப் பராபரனுக்குள் ஒளிந்துமிருக்கிறது."

"நம்முடைய சீவனாகிய கிறிஸ்து வெளிப்படும் போதினில் நீங்களும் அவருடனே கூட மகிமையில் வெளிப்படுவீர்கள்."

இறுதியில் Trichy என்ற வாசகம் திருச்சிராப்பள்ளியிலே இந்த கல்வெட்டானது செய்யப்பட்டது என்பதை சொல்லுகிறது.

**வரலாற்றுச் சின்னம்:**

சர்வ சாதாரணமாக பாதுகாப்போ, பராமரிப்போ, இல்லாத நிலையிலும், ஏதோ ஒரு நிலத்தில் இத்தனை (அதாவது இன்றைக்கு 123 வருஷங்களுக்கு மேலாக) வருஷங்களாக நிலைகொண்டிருக்கும் இந்த நினைவுச் சின்னம் ஒரு வரலாற்றுச் சின்னம் ஆகும். இதனை பாதுகாப்பது நம்மேல் விழுந்த கடன். இத்தனை வருடங்களைத் தாண்டியும் நிலைத்திருக்கும் நிலையில், இதற்கு இனிமேல் ஏதாவது ஆபத்து நேர்ந்தால் அதற்கு நாம்தான் பொறுப்பு என்று பாதுகாப்பிலும், போராட்ட களத்திலும், கடமையாற்ற நாம் அழைக்கப்பட்டிருப்பதாக உணர்கிறேன்.

**ஜே.பர்னபாஸ்**
**சேலம்**





# புரட்சிப்புயல் ஏமிகார்மைக்கேல்

முனைவர் த. ஜான்சிபால்ராஜ்
jansy.emmima@gmail.com

அத்தியாயம் 02

செல்வி... செல்வி... இன்னும் எந்திரிக்கலையா... உங்க செவுள கோழி, குஞ்சும் குருவுமா வந்திருக்கு... வெளியே வாயேன்.... சிறுவர்களின் சிரிப்பு சத்தமும் கூச்சலுமாக இருந்தது முற்றத்தில்.

செல்வியும் லட்சுமியும் ஒரே நேரத்தில் கண் விழித்து சத்தம் வந்த பக்கம் தலையைத் திருப்பி பார்த்தனர்....

செல்வி உடனே படுக்கையிலிருந்து எழுந்து கொண்டாள். அம்மா கிழக்கு வெளுகுமுன் வீட்டையும் வெளி முற்றத்தையும் சுத்தம் செய்து சாணம் கரைத்து முற்றம் தெளித்து... தண்ணீர் எடுக்க கிணற்றிற்கு சென்றிருந்தாள்.

கதவு அடைத்திருந்தது. அதை எளிதில் தள்ளி திறக்க சிறுமிகளால் இயலாது.

செல்வி...செல்வி...வெளிய வாயேன்... உன் செவிள கோழிய பாரு... குஞ்சுகளோட வந்திருக்கு பாரு..... மீண்டும் ஒருத்தி சிரிப்பையே மொழியாக்கி கூரைக்கு கீழ் தலையைவிட்டு சுவற்றின் வழியாய் எட்டிப் பார்த்தாள்.

என்ன.. எஞ்செவிள வந்துட்டா... ? உட்கார போட்டிருந்த மரக்கட்டையை இழுத்து சுவர் ஓரமா போட்டு ஏறி நின்று கூரை இடுக்கில் எட்டிப் பார்த்தாள். ஆங்....என் செவிள வந்துட்டு.... ஏய்... கதவ இழுக்க வாங்கல.... தெறங்கல....வெளியே வாரேன்... என்றாள்....ஆனந்தம் பொங்கியோட..

ஒரு மாதத்திற்கும் மேல காணாமலே போய்விட்ட கோழி, குஞ்சு பொரித்து குடும்பமா வந்திருந்தது அன்று. அவள் மிகுந்த ஆசையோடு பாசமாக வளர்த்த கோழி அது.

திடீரென கொஞ்ச நாளா வீட்டிற்கு வரல. யாரோ பிடித்து தின்னுட்டாங்கன்னு என் பாட்டி சாட மாடையா ஏசிகிட்டு இருந்திச்சு. இப்போ உசுரோட வந்திருக்கு.எல்லாம் நீ வந்த நேரம் தான் அக்கா.... திரும்பி பார்த்து கிட்டத்தட்ட எல்லா பற்களும் தெரியுமளவு சிரித்தாள் செல்வி.

வா...வா... போய் பார்ப்போம்....லட்சுமியினருகில் போனாள். அவளும் மெல்ல எழுந்து வெளியில் செல்ல தயாரானாள். அம்மா வரும் சத்தம் கேட்டது.

என்னல... எல்லாரும் வெள்ளனே இங்க வந்துரிக்கிய.... என்றவள் கோழியைப் பார்த்ததும் மகிழ்ச்சியின்றி அதிர்ச்சி காட்டிப் பதட்டமானாள்.

அய்யயோ... இது வராமலே போயிருந்தா கூட நான் சந்தோசமா இருந்திருப்பேனே...இன்னைக்கி என்ன ஆவபோவுதோ தெரியலையே என்றவள்..தலையிலுருந்த பானையை இறக்கியபடி.. செல்வி..... என்று கத்தினாள் அதிர்ச்சி மாறாமல்.

கோழி கொக்..கொக்கென்று கூட்டத்தைப் பார்த்து கலைந்து குஞ்சுகளோடு வீட்டின் பின்புறம் போய்க் கிண்டி கொண்டு நின்றது.

ஏம்மா... இப்படிக் கவலையா இருக்க என்றவள் திடுக்கிட்டாள்.

தூரத்தில் காத்தருத்தா பாட்டி வாயில் வந்த அத்தனைக் கெட்ட வார்த்தைகளையும் சுதி மாறாமல் எதுகை மோனையோடு ஒப்பித்துக் கொண்டே வந்தாள். தொண்டை நரம்பு புடைக்க வாயில் வெற்றிலைச் சாரு ஒழுக அவிழ்ந்து விழுந்த முடியை தூக்கி முடிந்தபடி செல்வியின் வீட்டை நோக்கி வந்து கொண்டிருந்தாள்.

அய்யோ அதற்குள் இவள் காதில் ஓதிவிட்ட புண்ணியவதி யாருன்னு தெரியலையே.... கொதித்தது பயத்தில் தங்கமாளுக்கு மனமும் உடலும்.!

வா...வா வீட்டுக்குள்ள போய்ருவோம். அது வருது. இன்னைக்கு நம்மள விடாது... என்றவள், இரண்டுபேரையும் இழுத்துக் கொண்டு வீட்டிற்குள் சென்று கதவை வேகமாகப் பூட்டிக்கொண்டாள்.

அக்கம் பக்கத்து வீட்டாரெல்லாம் காத்தருத்தாள் பாட்டியின் சத்தம் கேட்டு எட்டிப்பார்த்துக் கொண்டனர். இன்னைக்கு தங்கம்மா செத்தா....நல்ல கூத்து தான் போ....கெக்கரித்துச் சிரித்து வாயை மூடிக்கொண்டு வெளியில் வந்து சண்டையைப் பார்க்க தயாராகி நின்றனர்.

ஒன்றிரண்டு இளசுகளும் மெல்ல வெளியில் எட்டிப் பார்த்தனர் புன்னகை நிரம்பி...

இன்னைக்கு நல்ல வேட்டு தான்...வால பாப்போம் என்று தொலைவில் ஆங்காங்கே மறைவில் காற்றாட காலைக்கடன் முடித்துக் கொண்டிருந்த சுட்டிகளும் அறைகுறையாய் ஓடி வந்து தயாராக நின்றனர், சண்டையின் வேகத்தை ஆராய..!

அந்த சிற்றூரில் காத்தருத்தாள் பாட்டி என்றால் எல்லோருக்குமே பயம். கோபக்கணைகளை கெட்ட வார்த்தைகளாக்கி எய்வதில் பெயர் போனவள். களவு, பொய், புரட்டு, கோள் என்று எல்லா தவறுகளையும் மிக லாவகமாக செய்து விட்டு தப்பித்துக் கொள்வாள். எனவே அங்கு யார் வீட்டில் எது களவு போனாலும் காத்தருத்தாளை தான் நினைவு கூர்வர். அதையே சாதகமாக வைத்து களவு செய்து பழியை பாட்டி மீது போட்டு வேடிக்கைப் பார்க்கும் திருடர்களும் அங்கு உண்டு.

இந்தமுறை செல்வி வீட்டு கோழி காணாமல் போனபோது, செல்வியின் பாட்டி, செல்லம்மாள் காத்தருத்தாள் வீட்டுக்கே சென்று என் கோழியை அடித்து கொழம்புவச்சி தின்னுட்டு கிழங்கு மாதிரி அலையுதுயே… நீயெல்லாம் சாவப்புடாது. என்று கேட்ட கேள்வி அங்குள்ள அத்தனை பேருக்கும் தெரியும்….!

காத்தருத்தாளை நேருக்கு நேர் மோதிய ஒரே பொம்பள நீதான் செல்லம்மா, என்று தூண்டி விட்டு அவளோடு நேருக்கு நேர் நின்று பேச பயப்படுபவர்கள் தங்கள் கோபத்தைத் தணித்து கொண்டனர்.

நல்ல வேளை, செல்லம்மா அவள் மகள் வீட்டிற்கு பிரசவம் பார்க்கப் போய் ஐந்து நாளாச்சு.

கோழி வைக்க படப்புக்குள்ள முட்டப்போட்டு குஞ்சு பொறிச்சிருக்கு. இந்தத்…..தே…..யா செல்லம்ம நான் கோழிய மூடி போட்டு முட்டைய எடுத்து தின்னேன்னு சாட போட்டுட்டு அலைஞ்சா… பெறவு கோழி காணாம போனப்ப எம்மூட்டுலருந்து கோழிக்கறி வாட வருதுன்னு மோப்பம் புடிச்சிக்கிட்டு அலைஞ்சா.

அவள எங்களா? நான் இன்னைக்கு இரண்டில ஒன்னு பாக்காம விடவே மாட்டேன்…. அவளோட காத்த அருத்து, மூளியா அலைய உடலன்னா நான் எங்கப்பன் சொடலைக்கு பெறக்கலளா….. எங்களா அந்த வெளங்காத மூதி?? கதவை எட்டி மிதித்தபடி கத்தினாள்.

லட்சுமிக்கு அப்போது தான் காத்தருத்தாள் என்ற பெயருக்கான காரணம் புரிந்தது. மிக லேசாக புன்னகை அரும்பியது அவளுக்கும்…அடக்கிக்கொண்டாள்.

பாட்டியோ…

எங்க பாட்டி.. அத்தை ஊருக்கு போயிட்டு. புள்ள பெறந்திருக்கு அத்தைக்கு….அழுதபடியே சொன்னாள் செல்வி.

அவ வரட்டும், அவ வாய கிழிக்காம விடமாட்டேன்….. மூச்சடைக்க குமுறியபடி மாரியம்மன் திருவிழாவில் அருள் பெற்று முறைக்கும் அம்மன் போல் நடந்தாள்…காத்தருத்தாள்.

அதுவரை வெளியில் நின்று ஒன்று விடாமல் கேட்டு உள்வாங்கி இரசித்தவர்கள்,

ஊராவூட்டு சங்கதிய நமக்கென்னத்துக்கு… வாங்களா போவோம் என்று வீட்டைப் பார்த்து நடந்தனர். சண்டை இத்தனை சீக்கிரம் ஓயுமென்று நினைக்கவே இல்லை ஒருசேர அத்தனை முகங்களிலும் லேசான சோகம்.

லட்சுமி இருவரையும் மாறிமாறி பார்த்தாள்.

இந்தப் பாட்டி இப்படித்தான் எதற்கெடுத்தாலும் கத்தும். நீ பயப்படாதே. சரியா..? என்றாள் அம்மா.

ம்….தலையாட்டினாள் லட்சுமி.இதனிடையே கண்களில் கேள்வித் தொடுத்தாள்…மிசி அம்மாகிட்ட எப்போ போகணும்? என்று.

இரு இரு… கொஞ்சம் கஞ்சி குடிச்சிட்டு மிசியம்மாகிட்ட போவோம் சரியா?

ம்ஹூம்…. தலையாட்டினாள் வேண்டாமென்று.

ஏப்பிள்ள… வயித்தில ஒன்றும் இல்ல. ஒட்டிக் கிடக்குப்பாரு… தொட்டுக் காட்டினாள்.

கஞ்சி குடிமா. கொட்டாரஞ்சம்பா அரிசி கஞ்சி.தொட்டுக்க தொவையல் அறைக்கேன் கண்ணு… கெஞ்சினாள்.

மௌனம் சாதித்தாள் லட்சுமி.

உன்னை பட்டினிப் போட்டுட்டு எனக்கு தொண்டைக்குள்ள பருக்க இறங்காதும்மா. நேத்தே எனக்கு திங்க முடியல. வெள்ளனயாவது சரியாயிருவான்னு நெனச்சேன்.

உறுதி மாறாமல் இடவலமாய் தலையாட்டினாள் .

சரி சரி வா… இப்பவே போவோம். அரை மையில் தூரம் தான் இருக்கும். இப்பமே நடந்தா தான் நடு வெயிலுக்கு முன்னால நான் இங்க வர முடியும்.

செல்வி நீ இங்கயே

இருந்துக்க… நானும் வருவேன்…சிணுங்கினாள்.

வேண்டாம்மா…முள்ளுக்காடு. வெயிலுக்குள்ள நீ எதுக்கு,வேண்டாம் இங்கயே இருந்துக்க .கோழிய பாத்துக்க.நான் சீக்கிரம் வந்துருவேன், என்ன?

ம்…. என்றாள் லட்சுமியை பார்த்தபடியே…கலங்கிய கண்களோடு.

அக்கா நம்ம கூடயே இருக்கட்டும்மா. .. அன்பில் தோய்ந்திருந்தன சொற்கள்.

எனக்கும் ஆசதான்மா. அக்கா கோயில் பொண்ணு. நம்ம வீட்ல வைக்க முடியாது. இவ இங்க இருப்பது தெரிஞ்சா அங்குள்ளவங்க நேரே இங்க வந்து இழுத்துட்டுப் பெய்ருவாங்க. அந்த வெள்ளக்காரம்மான்னா நிறைய விசயம் தெரிஞ்சவங்க. என்ன வந்தாலும் பேசிகிடுவாங்க. அவளும் அவுங்கள தேடிதான வந்திருக்கா. என்ன நடக்குமோ தெரியல…

லட்சுமி தரையை வெரித்துப் பார்த்தபடி குழப்பமான சிந்தனைக்குள்ளாகியிருந்தாள்.

சரி…. கௌம்பு.குளிக்கியாமா? அசையாமல் நின்றாள்.

சரி … மூஞ்சி கைக்காலாவது கழுவிக்கோ சரியா?

ம்…. என்றாள்.

அந்தச் சிறிய குடியிருப்பில் ஓர் இரவை கழித்தது வாழ்வின் ஒரு கட்டத்தையே கடந்து வந்த உணர்வு லட்சுமிக்கு. தான் சென்றடைய போகும் இலட்சிய மலையுச்சியை நோக்கி பயணிப்பதைப் போன்ற ஒருவித பரவசம் மனதிற்குள் பரவ, வேகமாக வெளியே வந்து நடக்கத் தயாரானதை செல்வியும் அம்மாவும் கவனித்து ஒருவரை ஒருவர் பார்த்துக் கொண்டனர். இனம் புரியாத அமைதி அங்கு.

செல்வி நின்ற பக்கம் திரும்பியவள் போகிறேன் என்று தலையசித்தாள்…

போய்ட்டு வாக்கா…என்றாள் செல்வி.

பதிலுக்கு நுண்ணிதழ்கள் மகிழ்ச்சியை வெளிக்காட்டி லேசாக விரிந்தன.

பண்ணைவிளை என்ற ஊரின் முகப்பில் இருந்த சிறிய குடியிருப்பு இது. இப்படி ஊரை சுற்றி ஆங்காங்கே மக்கள் வேலை செய்யும் இடங்கள், தோட்டம் துறவுகள் இருக்கும் இடங்கள், போன்றவற்றை மையப்படுத்திய குடியிருப்புகள் அமைத்து வாழ்ந்தனர் மக்கள். அவை எல்லாமே அந்தந்த முதன்மையான ஊர்களின் பெயரோடுதான் அடையாளப்படுத்தப்பட்டன. சில குடியிருப்புகள் மட்டும் அங்கிருந்த கோவில்கள், தெய்வங்கள், திசைப் பெயர்கள், முன்னோர்களின் பெயர்கள் ஆகியவற்றோடு இயங்கின.

அந்த வகையில் இந்தக் குடியிருப்பும் இதனருகில் இருந்த இன்னுஞ்சில குடியிருப்புகளும் பண்ணைவிளைக்குத் தெற்குத் திசையில் அமைந்திருந்தால் அவைகள் தெற்கு பண்ணைவிளை என்றாயிற்று.

எனவே வடக்கு நோக்கி இருவரும் நடக்கத் தொடங்கினர். இருவரும் சற்று நேரம் அமைதியாய் நடந்து கொண்டிருக்க.. அமைதியைக் கிழித்து, ஏய் மாணிக்கம் பொண்டாட்டி தான அங்க போறது…. ?என்றது ஒரு பெண் குரல்.

திரும்பிய தங்கம்மாள்….ஆ…ஆமா மைனி.

எங்க போறா…வடக்கூருக்கா? அதுசரி….. அது யாரு? பெருங்குளத்து கோயில் பொண்ணு மாறில்லா இருக்கு? எங்களா கூட்டிட்டு போறா?

அது வந்து…மைனி….. நான் வந்து பெறவு சொல்லுதேன்…

என்றவள்… அப்பாவியாய் சோர்ந்து தொங்கிய லெட்சுமியின் முகத்தைப் பார்த்தபடி…மீண்டும், வந்து சொல்றேன் சரியா? என்று சைகை காட்டி விட்டு நடந்தாள்.

இருபுறமும் சற்றுக் குழிந்து நடுவில் மேடான அகலமான வண்டித்தடம் அந்தப் பாதை… பாதையின் இருபுறமும் புளியமரங்களும் வேப்ப மரங்களும்தான் அதிகளவில் இருந்தன. அதிகாலை வெயிலென்றாலும் சீரிதான் வந்து கொண்டிருந்தது…லேசாக வீசிய காற்றும் ஆடியசைந்து கொண்டிருந்த மரக்கிளைகளும் வெம்மையை லேசாகக் குறைத்துக் கொண்டிருந்தது. லட்சுமி எதையும் கண்டு கொண்டதாகத் தெரியவில்லை …!

லெச்சுமி…. ம்….. என்றாள்.

உனக்கு எப்படி மிசியம்மாவ தெரியும்?

சில வினாடி நிசப்தம். பிறகு, அது.. அவுங்கள பற்றி எங்க கோயில்ல பேசிகிட்டாங்க அடிக்கடி.

உங்க கோயில்லயா? அவிய வேதகாரவிய. உங்க கோயில்ல அப்படி என்னத்த பேசினாங்க லெச்சுமி?

அந்த மிசியம்மா எங்கையாவது கஸ்ட்டப்பட்டு அநாதையா வாழுறவங்களிடம் இருப்பது தெரிந்தால் அங்கு போய் ஆறுதலா பேசி அவர்களை தன்னோட வீட்டிற்கு கூட்டிட்டு போய் கூடவே வச்சிக்குவாங்கன்னு சொன்னாங்க.

சின்ன பிள்ளைங்ககிட்டையும் நல்லா பேசி அவங்களயும் மனசை மாற்றி கூட்டிட்டு போயிருவாங்கன்னு சொல்வாங்க. அதனால அவங்க கிட்ட யாரும் பேசவோ அவுங்களை பார்க்கவோ கூடாதுன்னு எங்க கிட்ட சொல்வாங்க. தினமும் ஒருமுறையாவது அவுங்க பேச்சு இப்படி அடிபடும்.

அப்படியா…? ம்…!

சரி, அப்படின்னா நீ ஏன் தங்கம் அவுங்கள பார்க்கணுமுன்னு வந்திருக்க?

அது….. என்றவள்… வேக நடையோடு பேச்சும் சேர்ந்து பசியில் மூச்சு வாங்கி நின்றாள்.

சுற்றுமுற்றும் பார்த்தவள் ..ஓரத்தில் கிடந்த உயரமான ஒரு கருங்கல்லில் போய் அமர்ந்தாள்.

தங்கம்மாள் அவள் அருகில் சென்று….என் ..னம்மா? என்றாள் பரிவாக. கொஞ்சம் உட்கார்ந்து போவோம், என்றவள். ஒரு காலை அடுத்தக் காலின் மேல் மடக்கி வைத்து உள்ளங்காலை கையால் துடைத்தபடி இங்க பாருங்க…என்று சுட்டிக் காட்டினாள்….

சூடு வச்சிட்டாங்க… என்றதும் துக்கம் மேலும் அடைத்து தேம்பினாள்…

ஏன் மா….?கண்ணீரை துடைத்து விட்டு கேட்டாள்…

ம்…. அவுங்க சொன்னபடி நடக்கல நான். என் அம்மாவ பார்க்க ஓடிட்டேன்….தூத்துக்குடிக்கு….! கண்களை கசக்கி அழுதாள் தேம்பினாள்…

அப்படியா….?

ஆமா….. ஒருநாள் கூட இருக்க விடல…எங்க அம்மா கிட்டயிருந்து இழுத்திட்டு வந்து இப்படி சூடு வச்சிட்டாங்க….. காலையே பார்த்தபடி சொல்லி முடிக்க….கண்ணீர் காலை கழுவிக் கொண்டிருந்தது.

தங்கம்மாவால் தாங்க முடியாமல் முந்தாவணியால் வாயை மூடி விம்மினாள்..! அவள் முதுகில் கை வைத்து… அழாதம்மா.. என்றாள் அழுதபடியே…! அடுத்தக் காலையும் தூக்கி காட்டினாள்… அழுகை இருமடங்காகியது.

எனக்கு அங்க இருக்க பிடிக்கல… நானும் அநாதை தானே.. எங்க அம்மா அப்பா இரண்டு பேரும் இல்லாம தான இருக்கேன்.

என்னையும் அந்த மிசியம்மா சேத்துக்குவாங்க தான….? வேதனை பொங்கிச்சாட பதிலுக்காக தங்கம்மாவை பார்த்தாள்.. .. கண்ணீரை துடைத்துவிட்டு ஆமாம் என்று மேலும் கீழும் தலையசைத்தாள் வேகமாக….தங்கம்மாள்.

அந்த பதிலில் அழுகை மெல்ல குறைந்து இதயம் இயல்புக்கு திரும்பி கொண்டிருந்தது லட்சுமிக்கு.

இன்னும் கொஞ்ச தூரம் தான் கண்ணு…

ம்… என்றவள்..எழுந்தாள். அவ்வப்போது வேதனைகள் ஏக்கங்களாக வெளியேறியதை அவள் மூச்சுக்காற்று சத்தம் வழிநெடுக தெரிவித்துக் கொண்டே வந்தது.

இனி இவளிடம் எதையும் கேட்கவே கூடாது. இந்த பிஞ்சு நெஞ்சம் முழுவதும் வேதனையின் கூக்குரல். அந்த மிசியம்மாவிடம் கொண்டு சேர்த்து விட வேண்டும்.

எந்த தடங்கலும் வந்து விடக் கூடாது சாமி… என்று வேண்டினாள் தொலைவில் காட்டிற்குள் தன்னந்தனியே நின்று கொண்டிருந்த உயர்ந்த மண் பீடங்களைப் பார்த்தபடி. பார்வைக்கெட்டிய தொலைவில் ஊர் இருந்தது. ஊர் முகப்பில் குடிநீர் கிணற்றில் பெண்கள் தண்ணீர் எடுத்துக் கொண்டிருக்க…. கொஞ்சம் தண்ணி குடிப்போம் வா என்றவள்.. ஊருக்குள் போகும் வழியிலிருந்து விலகி கிணற்றண்டை நடந்தாள்.

தண்ணீர் இரைத்தவள் பட்டையிலிருந்த தண்ணீரை பானையில் ஊற்றாமல். வாங்க வாங்க.. தண்ணி குடிங்க… என்றாள்.

சற்றுக் குனிந்து இரண்டு கைகளையும் குவித்து வாயோடு சேர்க்க, அந்தப் பெண் ஊற்றிய தண்ணீரை வேக வேகமாக உள்ளிழுத்துக் கொண்டாள் தங்கம்மா.

அடுத்து லெச்சுமி….. சற்றுத் தயங்கினாலும்…தாகம் அவளைக் குனிய செய்து, பருக வைத்தது.

எங்க இந்த பக்கமா வந்திரிக்கிய…. தெக்கூரா? வந்த பாதையை வைத்து கேட்டாள்.

ஆமா… மிசியம்மாவ பார்த்துட்டுப் போகதான்.

குடத்தோடு வந்த இன்னொருத்தி, யாரு ஏமியம்மாவையா….? அவுங்க ஒரு பத்து நாளா இங்க இல்லையே….!

ஐயோ….. என்றாள் வெடுக்கென்று லெச்சுமி…!

எங்க போனவ….?தங்கமாள் தவிப்போடு கேட்டாள்…

டோனாவூருன்னு ஒரு ஊருக்கு வாக்கரையாவும் அம்மாவும் ஊழியத்துக்கு போயிருந்தாவ.கொஞ்ச நாளா அங்கதான் தங்கியிருந்தாவ. பெறவு அந்த ஊரை போய் பாத்துட்டு வரலாமுன்னு ஏமியம்மாவும் அவுங்க கூட்டாளிங்களும் சேர்ந்து போயிட்டதா நேத்து கோயில் குட்டியண்ணன் சொன்னாவ.

எப்பம் வருவாவன்னு தெரியுமா?

லட்சுமிக்கு அதிர்ச்சியில் தலைசுற்றியது. கிணற்று சுவற்றில் சாயப்போனவளை தங்கம்மா…பிடித்துக் கொண்டாள். கிட்ட போகாத…உள்ள விழுந்திறாதமா.

வந்துருவாங்க….என்றவள்,

தடுமாறிய லட்சுமியின் கைகளைப் பிடித்து தன் பக்கம் இழுத்துக் கொண்டாள்.

எப்ப வருவாவன்னு சரியா தெரியாது. வந்ததே வந்துட்டிய ஒரெட்டு வேத கோயிலுக்கு போய் அந்தக் கோயில் குட்டிகிட்ட கேட்டுட்டுப் போங்க என்றவள் குடத்தை தூக்கிக் கொண்டு வெடுக்கென்று நடந்தாள்.

பார்வையோ லட்சுமியின் மேல் ஆழமாக பதிந்திருந்தது அந்தப் பெண்ணிற்கு. இருந்தாலும் அவளைப் பற்றி எதுவும் கேட்கத் தோணவில்லை அவளுக்கு.

சரி, வாம்மா…. அன்னா இருக்கு பாரு வேத கோயில்…. தெரியுதா?

ம்…. என்றாள்.

அது பக்கத்தில தான் மிசியம்மா இருக்கிற வீடு.

அப்படியா…. என்றவள். மிசியம்மா வீட்டில் இல்லா விட்டாலும் அந்த வீட்டு பக்கத்திலேயே வரும்வரை இருந்துவிட வேண்டியது தான் என்று மனதிற்குள் பேசி அமைதியானாள்.

கோயிலையே பார்த்தபடி நடந்தனர்.... சற்றுத் தொலைவில் அழகிய வில் வண்டி ஒன்று நிற்பது தெரிந்தது. அதன் அருகில் மாடுகள் வண்டியிலிருந்து அவிழ்த்துக் கட்டப்பட்டிருந்தது.

தங்கம்மாள் லேசாக யூகித்தாள்... இங்கு வில்வண்டி ஏமியம்மையைத் தவிர வேறு யாரும் வைக்கலையே... அப்படியானால்...யோசிக்கும் போதே... இருட்டில் மின்னிய மின்மினி வெளிச்சமாய், முகத்தில் சட்டென மலர்ச்சித் தோன்ற...

லெச்சுமி ....மிசியம்மா இருக்காங்க...பயப்படாத வா...

சரி.... வேகமாக நடந்தன கால்கள். என்னம்மா.....இந்தப் பெண் யாரு....? எதிரில் கம்பூன்றி நடந்து வந்து கொண்டிருந்த பெரியவர் கேட்டார்.

அய்யா.... மிசியம்மா இருக்காங்களா....? ஆர்வம் மிக கேள்வியையே தானும் வைத்தாள் தங்கம்மாள்.

ஆங்....இப்ப தான் வந்தாவ. அன்னா வண்டி நிக்குதுல்லா. கொஞ்சம் மிந்திதான் வந்தாவ... சரி....இந்த பொண்ணு....?என்று விடாமல் தொடர்ந்தார்... இவளா..எம் பொண்ணுதான். இன்னா இப்ப வந்துருதேன் ஐயா... என்றவள்,

லெச்சுமி... அந்த அம்மா இருக்காவளாம்...வா..வா.. என்றபடியே வண்டியை நெருங்கி கொண்டிருந்தனர்.

தேவாலயத்தின் வடக்கு பக்கம் சில புளியமரங்கள் சிறியதும் பெரியதுமாய் நிற்க ஆங்காங்கே ஒன்றிரண்டு பனைமரங்களும் அசையாமல் நின்று கொண்டிருந்தன. அவற்றிற்கிடையில் நீளவாக்கில் கட்டப்பட்ட ஓட்டுப்பறை வீடு ஒன்றும் அதனருகில் ஓலைவேயப்பட்ட இரண்டு சிறிய ஒற்றையறை குடிசைகள். அவற்றுள் ஒன்றிலிருந்து புகை வெளியேறிக் கொண்டிருந்தது. அது சமையல் கட்டாக இருந்தாகணும்.

சிலுசிலுவென சிரிப்பொலியும் மென்மையாக பெண்களின் பேச்சு சத்தமும்...கேட்டன.

ஒருத்தி வேக வேகமாக வெளியில் மண்டி கிடந்த குப்பைகளை கூட்டிப் பெருக்கிக் கொண்டிருந்தாள். ஒரு பெண் ஆங்காங்கே விழுந்து கிடந்த காய்ந்த மரக்கிளைகளை சேகரித்துக் கொண்டிருந்தாள். ஒரு பெண் பெருக்கப்பட்ட பகுதிகளில் புழுதியெழும்பாமலிருக்க தண்ணீர் தெளித்துக் கொண்டிருந்தாள்.

இருவரும் வண்டியினருகில் நின்றபடியே கவனித்துக் கொண்டிருந்தனர். ஆனால் ஏனோ அடுத்த அடி எடுத்துவைக்க தயக்கமாயிருந்தது.... மெல்ல கவனம் திரும்பி தங்கம்மாள் லட்சுமியை பார்த்தாள்....அம்மா....பால்....என்ற ஒரு சிறுவனின் குரல்...இருவரின் மனதையும் சலனமாக்கி நிமிர்ந்து பார்க்க வைத்தது.

வா....வா.... என்று அந்த ஓட்டுப்பறையிலிருந்து வெளியில் வந்தாள் அந்த அழகு பதுமை அன்பில் தோய்ந்த குரலோடு...!

நில், சர்வசட்டியை எடுத்துக்கொண்டு வந்துவிடுகிறேன்.... சரியா? என்றாள்.

சட்டென தமிழ் தூய்மை உடுத்தி அழகானது வேற்றுமொழியாள் ஒருத்தியின் சரியான உச்சரிப்பில்.

வா...வா என்று தன்னையே அழைப்பதைபோல் உணர்ந்தாள் லட்சுமி. ஓரிருமுறை ஏமியை தங்கம்மாள் பார்த்திருந்தாலும் இந்தமுறைதான் கூர்ந்து கவனித்தாள்...

உள்ளே சென்று கையில் பாத்திரத்தோடு வெளியில் வந்தாள். தெளிவாக தெரிந்தது அவளது புன்னகை தவழ்ந்த முகம். சற்றும் மாசற்ற வெண்மை நிறம். இந்தியப் பெண் போன்றே சேலைதான் உடுத்தியிருந்தாள். அளவான உயரமும், பருமனும். முடி பஞ்சுபோன்றும் பட்டுப்போன்றும் பளபளத்தது. கன்னங்கள் எப்போதும் சிரித்தபடியிருந்த முகத்தில் வெயில் பட்டு சற்று சிவந்து மினுமினுத்தது.. பாலை வாங்க சிறுவனிடம் நீட்டிய அந்த கரங்கள் பாலினும் வெண்மையாய் தெள்ளத் தெளிவாக தெரிந்தன.பகலிலும் பளிச்சென தெரியும் நிலவுபோல் இருந்தது அந்த உருவம்.

ஊற்றி முடித்த சிறுவன் ஏமியின் முகத்தை பார்த்தான்.... ஒரு கையால் அவன் கன்னத்தை தட்டி ஏதோ கொஞ்சலாக பேசியது தெரிந்தது. லட்சுமி தன்னையே தட்டுவதாக சிலிர்த்தாள்....அவள் உணர்வுகள் ஒன்றித்துப் போயிருந்தன ஏமியின் உணர்வோடு.

பாலை வாங்கியபடி வீட்டிற்குள் செல்ல திரும்பிய ஏமி..... ஏதோ அனிச்சையாகத் திரும்பி பார்வையை வெளியில் நின்ற வண்டி பக்கம் செலுத்தினாள். நான்கு கண்களின் பார்வை தன்னையே கவனிப்பதை அவள் உள்ளுணர்வு உணர்த்தியிருக்க வேண்டும். கூர்ந்து பார்த்தாள்... பிறகு இரண்டடி நடந்து வந்தவள், பொன்னம்மா... அங்கே பாருங்கள். அவர்களை இங்கு அழைத்துக் கொண்டு வாருங்கள். நம்மைதான் பார்க்க வந்திருக்கிறார்கள் என்று நினைக்கிறேன்.

சொல்லி முடிக்கும் முன் விறுவிறுவென நடக்கத் தொடங்கிவிட்டாள் பொன்னம்மாள். இவள்தான் ஏமியிடம் அடைக்கலமான முதல் ஆதரவற்ற பெண். சிறிது நாட்களுக்குள் ஏமியின் உடன் பிறப்பாக மாறி போயிருந்தாள்.

வாங்க....வாங்க....என்று கையசைத்தபடியே அருகில் வந்து கொண்டிருந்தாள். இருவரும் எதுவும் சொல்லாமல் மிக மெதுவாக நடந்து எதிர்க்கொண்டு சென்றனர்.

அம்மா உங்களை உள்ள கூப்பிட்டாங்க....

பாலோடு வெளியில். நின்றதை பார்த்த தேவாயி பாலை வாங்கி கொண்டு அடுக்களைக்குள் சென்றாள்...

ஏமி பொன்னம்மாளை தொடர்ந்து வந்து கொண்டிருந்தார். தேவாலயத்திற்கு முன்பு நான்குபேரும் அருகருகே வந்து நின்றனர்.

என்னம்மா....வாங்க....என்று கைக்கூப்பி முந்தி கொண்டார் ஏமி. தங்கம்மாவும் எதுவும் சொல்லாமல் கைகளை குவித்து வணங்கினாள் வார்த்தைகள் சிறையாகி நின்று கொண்டன. பதிலுக்கு மீண்டும்கைக்கூப்பி புன்னகையோடு வணக்கம் தெரிவித்தவர் தன் பார்வையை லெட்சுமியின் பக்கம் திருப்பி.....இவள்..? என்று கேள்வியோடு நிறுத்தி உற்று பார்த்தார்.... லட்சுமியால் அந்தப் பார்வையை எதிர் கொள்ள இயலவில்லை.... அவளை அறியாமலேயே ஓடிச் சென்று ஏமியின் கால்களைக் கட்டிக் கொண்டு அம்மா.....என்று தன் பலம் முழுவதையும் பயன்படுத்தி கத்தியழுதாள்....

என்னாச்சு....ஏன் இப்படி.....பொன்னம்மாள் அடுக்கிக் கொண்டிருக்க...

ஏமிகார்மைக்கேல் எதுவுமே கேட்காமல் லட்சுமியை தூக்கி தோளில் போட்டுக் கொண்டு முதுகைத் தடவி....அழாதே... அம்மா இருக்கிறேன்.... அழாதே....என்று சொகம் தாழ அவள் காதோடு பலமுறை கூறினாள். அவள் அழுகை அடங்க சில மணித்துளிகள் பிடித்தன. அதற்குள் அங்கு வேலையில் மூழ்கியிருந்த அத்தனைபேரும் அருகில் கூடிவிட்டனர்.

அவளைத் தோளில் போட்டபடியே வீட்டிற்குள் செல்ல நடந்தாள் ஏமி.அனைவரும் பின் தொடர்ந்தனர். அடிபட்டு வீழ்ந்த பறவையின் உயிரைக் காப்பாற்ற தூக்கிச் செல்லும் பாசமிகு சிறுவனைப் போல...நடந்து சென்றாள் ஏமி.

லட்சுமி இறங்கி நடக்க முயற்சித்தாள். ஏமி அழுத்தமாக்கினாள் அன்பின் பிடியை. வீட்டிற்குள் கொண்டுவந்து இறக்கி விட்டாள். வா....என்றாள் அந்த நார்கட்டிலில் அமர்ந்தபடியே. லட்சுமியை தன் மடியில் தூக்கி வைத்து அவள் முகத்தை கைகளால் துடைத்து கன்னத்தில், நெற்றியில், தலையில், நாடியில் என்று முத்தமிட்டாள்

லட்சுமியின் ஆராத ரணங்கள்....அந்த அன்புத்தீயில் அழிந்து கொண்டிருந்தது...

அத்தாயின் பரிவில் மாற்று மனுசியாகப் மறுபடியும் பிறந்து கொண்டிருந்தாள் லட்சுமி.

ஏமியின் தாய்மைக்குள் மெல்ல சாய்ந்து கொண்டாள் குழந்தை லட்சுமி..!!

தொடரும் பாட்டி...

# வரலாற்றுச் சங்கம்

**திருநெல்வேலி கிறிஸ்தவ வரலாற்றுச் சங்கத்தின் அன்பின் வாழ்த்துக்கள்.**

பூர்வ நாட்களை நினை; தலைமுறை தலைமுறையாய்ச் சென்ற வருஷங்களைக் கவனித்துப்பார்; உன் தகப்பனைக் கேள், அவன் உனக்கு அறிவிப்பான்; உன் மூப்பர்களைக் கேள், அவர்கள் உனக்குச் சொல்லுவார்கள். (உபாகமம் 32:7)

மோசே இஸ்ரவேல் ஜனங்களிடம் கூறும் போது **'பூர்வநாட்களை நினை; தலைமுறை தலைமுறையாய்ச் சென்ற வருஷங்களைக் கவனித்துப்பார்'** என்று கூறுகிறார். வரலாற்றின் பக்கங்களை நாம் திரும்பி பார்க்கும் போது, அநேக அனுபவங்களையும், பாடங்களையும் அவை நமக்கு கற்றுக் கொடுக்கின்றன.

பாதை தெரியாத நிலையில் இருக்கும் போது வரலாற்று சம்பவங்கள் நமக்கான பாதைகளை நமக்கு காட்டுகின்றன. (முன் நடந்ததே இப்பொழுதும் நடக்கிறது; இனி நடக்கப்போகிறதும் முன்னமே நடந்தது. (பிரசங்கி 3:15))

ஒவ்வொரு காலகட்டத்திலும் பல்வேறு வரலாற்று அறிஞர்கள் வரலாற்றை அதிக தியாகத்தோடும் அர்பணிப்போடும் தம் அடுத்த தலைமுறைக்கு மிகச் சிறந்த வழிகாட்டியாகவும் பொக்கிஷமாகவும் கொடுத்துள்ளனர். அதை போற்றுவதும் நம் அடுத்த தலைமுறையினருக்கு கொண்டு செல்வதும் நம் மேல் விழுந்த தலையாய கடமையாகும். அந்த அளப்பரிய பணியை செய்ய அர்பணிக்கப்பட்ட இயக்கங்களுள் திருநெல்வேலி **கிறிஸ்தவ வரலாற்றுச் சங்கமும்** ஒன்று.

திருநெல்வேலி **கிறிஸ்தவ வரலாற்றுச் சங்கம்** தமிழ் கிறிஸ்தவ வரலாற்று ஆய்வாளர்கள் பலரின் அரும் பெரும் முயற்சியினால் தொடங்கப்பட்டது. நம்முடைய வரலாற்று சங்கத்தின் தரிசனத்தில், இறையியல் கல்லூரி மாணவர்கள் பலர் தன்னார்வத்தோடு தங்களையும் இணைத்து செயல்பட்டு வருகிறார்கள். மேலும் தமிழ்நாடு முழுவதும் உள்ள பல வரலாற்று ஆய்வாளர்களுடன் கைகோர்த்து இப்பணியைச் செய்து வருகின்றோம்.

ஒவ்வொரு காலகட்டத்திலும் ஆண்டவர் வரலாற்று காரியங்களைப் பதிவு செய்வதில் தமக்கு ஏற்ற இறைமக்களைப் பயன்படுத்துகிறார். வரலாற்றைப் பதிவு செய்வதில் பழைய ஏற்பாட்டில் மோசே, யோசுவா, எஸ்ரா ஆகியோரையும் புதிய ஏற்பாட்டில் நற்செய்தியாளர்கள் மத்தேயு, மாற்கு, லூக்கா, யோவான், பேதுரு, பவுல் ஆகியோரையும் அதிகமாக பயன்படுத்தி உள்ளதை நாம் பார்க்கிறோம்.

கிறிஸ்தவ வரலாற்றை பதிவு செய்யும் இறைபணியில் நம்முடைய திருநெல்வேலி கிறிஸ்தவ வரலாற்றுச் சங்கத்தையும் இறைவன் பயன்படுத்தவதை எண்ணி இறைவனுக்கு நன்றி செலுத்துகின்றோம்.

தமிழ் கிறிஸ்தவ வரலாற்றில் நீண்ட இடைவெளிக்கு பின்பு மீண்டும் ஒரு வரலாறு படைத்துத்துக் கொண்டு இருக்கும் மாத ஆய்விதழ் தான் **'கிறிஸ்தவ வரலாற்றுச் சுவடுகள்'**. கடந்த 2020ம் ஆண்டு ஜூன் மாதம் முதல் ஒவ்வொரு மாதமும் ஒவ்வொரு தலைப்பைக் கொண்டு பல்வேறு அரிய ஆய்வுக்கட்டுரைகளோடு மிக சிறப்பாக வெளி வந்து கொண்டிருக்கிறது. **மறைக்கப்பட்ட, மறந்த, மறைந்த** மிஷனெரிகள் மற்றும் திருச்சபை வரலாறுகள், கள ஆய்வுகள், பல்வேறு அரிய வரலாற்று பொக்கிஷங்களுடன் தமிழகம் முழுவதும் தொடர்ந்து 1600 க்கு மேற்பட்டவாசகர்களுடன் வந்து கொண்டு இருக்கின்றது.

- காலவோட்டத்தில் அறுபட்டுக்கிடந்த இசைத் தமிழ் கண்ணிகளைத் தற்கால இசைத் தமிழ் உலகுக்குக் கோர்த்துக் கொடுத்த மாபெரும் இசைத் தமிழ் அறிஞர் தஞ்சை ஆபிரகாம் பண்டிதர் அவருடைய அளப்பரிய செயல்களை நினைவுகூறும் வகையில் **ஆபிரகாம் பண்டிதர் நினைவு மின்னனு ஆராய்ச்சி நூலகம்** நம்முடைய சங்கத்தின் சார்பில் ஏற்படுத்தப்படுள்ளது. ஆபிரகாம் பண்டிதர் நினைவு ஆராய்ச்சி நூலகமானது தமிழ் கிறிஸ்தவ மின்னனு நூலகத்தில் **முதல் நூலகம்** என்ற சிறப்பைப் பெற்றது. இந்த நூலகமானது தமிழ் கிறிஸ்தவ வரலாற்று ஆய்வாளர்களுக்கும், எழுத்தாளர்களுக்கும், தமிழ் கிறிஸ்தவ ஆராய்ச்சி மாணவர்களுக்கும் பயன்படும் வகையில் அமைக்கப்பட்டுள்ளது. தமிழ் கிறிஸ்தவ வரலாற்றில் ஒரு புதிய மைல்கல்லாகவும் அமையும். மேலும் அநேக புதிய தமிழ் கிறிஸ்தவ எழுத்தாளர்களை உருவாக்கவும், ஆராய்ச்சியாளர்களை உருவாக்கவும் இது உதவியாக இருக்கும் என்பதில் எவ்வித ஐயமுமில்லை.
- வரலாற்று முக்கியத்துவம் வாய்ந்த, மறுபதிப்பு செய்து வெளியிடப்படாத கிறிஸ்தவ மிஷனெரிகளின் வாழ்க்கை வரலாறு புத்தகங்களை மறுபதிப்பு செய்து வருகின்றோம். குறிப்பாக நெல்லை திருமண்டல வரலாற்று அறிஞர் பேராசிரியர் அருள்திரு தே.அ. கிறிஸ்துதாஸ் ஐயர் அவர்களுடைய படைப்புகளை மறுபதிப்பு செய்து இன்றைய தலைமுறைகளுக்கு கொண்டு செல்லவும் முயற்சிகள் மேற்கொள்ளப்பட்டு வருகின்றோம். குறிப்பாக கடந்த ஆண்டு பேராசிரியர் அருள்திரு தே.அ. கிறிஸ்துதாஸ் ஐயர் அவர்களின் வரலாற்று சிறப்புமிக்க புத்தகம் அனைத்தையும் மறுபதிப்பு செய்து வருகின்றோம்.

**நம் சங்கத்தின் பத்து அம்ச செயல்திட்டத்தை நினைவுபடுத்துகின்றோம்:-**

- நம்முடைய வரலாற்று சங்கமும் கிறிஸ்தவ ஆய்வு மற்றும் ஆவணப்படுத்து மையமும் இணைந்து **'புத்தக வனம்'** செயலி செயல்பட்டுக் கொண்டு இருக்கின்றது. இந்த செயலி தமிழகத்தில் முதல் முறையாக டிஜிட்டல் முறையில் கையடக்க வடிவில் புத்தகமாக முழு நூலகமாக உங்கள் கைகளில் கொடுத்துள்ளோம். இன்னும் பல ஆயிரம் புத்தகங்களை பதிவேற்றும் பணி நடைபெற்றுக் கொண்டிருக்கின்றது. மேலும் பேராசிரியர் அருள்திரு தே.அ. கிறிஸ்துதாஸ் ஐயர் பெயரிலேயே **நினைவு புத்தக அங்காடி** ஒன்று ஏற்படுத்தப்பட்டுள்ளது.
- தமிழக வரலாற்றில் கிறிஸ்தவ மிஷனெரிகளுடைய பங்கு குறிப்பிடத்தக்கது. அந்த மிஷனெரிகள் பணி செய்த இடங்கள், அவர்களுடைய நினைவிடங்கள், தங்கியிருந்த இல்லங்கள், கல்லறைகள், வரலாற்று சிறப்புமிக்க ஆலயங்கள், இரத்த சாட்சிகளாக மரித்த மிஷனெரிகள் பணி செய்த மற்றும் தங்களை இரத்த சாட்சியாக ஒப்புக்கொடுத்த இடங்களை தெளிவான முறையில் பார்வையிடவும், வெளியிடங்களிலிருந்து வரும் மக்களின் வசதிக்காகவும் **Mission Tourist Map** என்று செயலி உருவாக்கி அதன் மூலம் அவர்கள் தங்குமிடங்கள், வழித்தடங்கள் அடங்கிய மின்னியல் கையேடு அமைப்பது.
- வரலாற்றின் பக்கங்களில் மறைந்து கிடக்கும் கீர்த்தனை கவிஞர்கள், உபதேசிமார்கள், முன்னாள் குருமார்களுடைய வரலாற்று பொக்கிஷங்களை சேகரித்து வருகிறோம். மேலும் அவர்களுடைய வரலாற்று தகவல்கள், அவர்களால் உருவாக்கப்பட்ட திருச்சபைகள், கிறிஸ்தவ பாடல்கள் உருவாக்கம் பெற்ற வரலாறுகள், பாடல்களின் வரலாறுகளையும் சேகரித்து அதை மின்னியல் முறைக்கு மாற்றும் பணிகளையும் செய்து கொண்டு இருக்கின்றோம்.
- தமிழ் கிறிஸ்தவ பழைய புத்தகங்களை சேகரித்து மின்னியல் முறையில் ஆபிரகாம் பண்டிதர் நினைவு ஆராய்ச்சி நூலகத்திலும், பேராசிரியர் அருள்திரு தே.அ. கிறிஸ்துதாஸ் ஐயர் நினைவு புத்தக அங்காடியிலும் பதிவேற்றம் செய்வதுடன் புத்தகங்களை தமிழ் கிறிஸ்தவ வரலாற்று ஆய்வாளர்களுக்கும், எழுத்தாளர்களுக்கும், ஆராய்ச்சி மாணவர்களுக்கும் பயன்படும் விதமாக ஒரு சிறந்த ஆய்வு நூலகம் அமைக்கவும் முயற்சிகளும் மேற்கொண்டு வருகிறோம்.
- மிஷனெரிகளின் வாழ்க்கை வரலாற்று சம்பவங்களை அடிப்படையாக கொண்டு ஆவணப்படங்களை வெளியிடுவதற்கான முயற்சிகள் செய்து கொண்டு இருக்கிறோம். கர்த்தருக்கு சித்தமானால், வருகிற ஆண்டு ஒரு மிஷனெரியின் வரலாற்றை ஆவணப்படமாக்க திட்டமிட்டிருக்கிறோம்.
- தங்களுடைய வசதியான வாழ்வை தியாகம் செய்து நம் நாட்டிற்கு வந்து கோதுமை மணிகளாய் விதைக்கப்பட்ட மிஷனெரிகள் மற்றும் தன் சொந்த மக்களுக்காக தங்களையே அர்பணித்த நம் இந்திய மிஷனரிகளின் நினைவிடங்கள் மற்றும் கல்லறைகளை கண்டறிவதுடன் திருச்சபையுடன் இணைந்து பராமரித்து அவர்களுடைய தியாகங்களை குறித்த விழிப்புணர்வை திருச்சபை மக்களுக்கு ஏற்படுத்த பணியாற்றி வருகிறோம்.
- வரலாற்று சங்கம் சார்பில் மிஷனெரிகள் பயன்படுத்திய கலை பொருட்கள் மற்றும் புத்தகங்கள், பைபிள், சேகரித்து வரலாற்று **அருங்காட்சியகம்** அமைக்கும் பணியில் ஈடுபட்டிருக்கிறோம். மிஷனெரிகள் பயன்படுத்திய பொருட்களை சேகரித்து வருகிறோம்.
- திருநெல்வேலி கிறிஸ்தவ வரலாற்று சங்கம் சார்பாக வரலாற்று **ஆய்வுக் கருத்தரங்கம்** நடத்துவது வரலாற்று கள ஆய்வு பயிற்சிக்கான Workshop நடத்தும் பணிகளை மேற்கொண்டு வருகிறோம். அதற்கான ஆயத்தப்பணிகள் நடந்துகொண்டிருக்கிறது.

கிறிஸ்துவுக்குள் பிரியமானவர்களே, கடந்த 2017ம் ஆண்டு அற்பமாக ஆரம்பிக்கப்பட்ட நம்முடைய திருநெல்வேலி **கிறிஸ்தவ வரலாற்றுச் சங்கம்** இது வரையிலும் பல்வேறு தடைகளையும், நெருக்கடிகளையும் கடந்து வந்திருக்கிறது. வரலாற்று ஆய்வாளர்கள், ஆசிரியர்கள், வாசகர்கள், நண்பர்கள், நலன்விரும்பிகள் ஆகியோருடைய இடைவிடா ஜெபத்தாலும், ஆதரவாலும், உதவியாலும் நம் திருநெல்வேலி கிறிஸ்தவ வரலாற்று சங்கம் தொடர்ந்து செயல்பட்டு வருகிறது. மேலும் நம்முடைய மாதாந்திர ஆய்விதழும் தடைகளின்றி வெளி வருகிறது. நம்முடைய கிறிஸ்தவ வரலாற்று சங்க செயல்பாடுகள் சிறப்பாக அமைய ஜெபத்தாலும், உடலுழைப்பாலும், பொருளாதார வழியிலும் உதவி வரும் அத்துணை நல்லுல்லங்களுக்கும் நன்றியினை தெரிவித்துக் கொள்கிறோம். தொடர்ந்து நாம் செயல்பட வேண்டிய தளங்கள் அநேகமுண்டு. இணைந்து செயல்பட அன்புடன் அழைக்கிறோம். வரலாற்று சங்கத்தின் ஓர் அங்கமாக வரலாற்றை அடுத்த தலைமுறைக்கு கொண்டு செல்லும் கருவியாவோம். சர்வ வல்லமை கொண்ட ஆண்டவரின் ஆயுதமாவோம்.

**Bank : Federal Bank**
**Name : Tinnevelly Christian Historical Society**
**A/c Number : 1748 0200 0036 84**
**IFSC Code : FDRL0001748**

christianhistorical@gmail.com

**சங்கத்தில் உறுப்பினராக இணைய**
**91767 80001**



**christianhistoricalsociety.in/**
**tchsportal.co.in**

# புத்தக அறிமுகம்

ஆக்கியோன்

**பேராசிரியர் தே.அ.கிறிஸ்துதாஸ்**

## புத்தகம் கிடைக்குமிடம்

- திருநெல்வேலி திருமண்டல புத்தக நிலையம்
- வரலாற்றுச் சுவடுகள் அலுவலகம்
- வரலாற்றுச் சங்க அலுவலகம்
- டாக்டர்.ஜியோ ஞானதுரை சிவகாசி

பேராசிரியர் அருள்திரு தே.அ. கிறிஸ்துதாஸ் ஐயர் (1912-1990) அவர்கள் தென் இந்தியாவின் ஆக்ஸ்போர்டு என்று அழைக்கப்படும் பாளையங்கோட்டையில் பிறந்து, வளர்ந்தவர். பள்ளி ஆசிரியர், வேதாகமக் கல்லூரி பேராசிரியர், முதல்வர், அருட்பணியாளர் மற்றும் எழுத்தாளர் என பல துறைகளிலும் ஜொலித்தவர். திருச்சபையின் வரலாறு மற்றும் திருச்சபையின் வெற்றிக்குக் காரணமான தேவ மனிதர்கள் பற்றி நாம் அறிந்து கொள்ள இவர் எழுதிய நூல்கள் ஒரு திறவுகோல் என்றால் அது மிகையாகாது. எளிய மற்றும் வட்டார வழக்கு தமிழில் எவரும் புரிந்து கொள்ளும்படி ஆராய்ச்சி மற்றும் வரலாற்றுப் புத்தகங்களை எழுதுவது இறைவன் இவருக்குக் கொடுத்த வரம். அநேக புத்தகங்களை மட்டுமல்ல, அநேக கிறிஸ்தவ தலைவர்களையும் இவர் தன் திருப்பணி மூலமாக உருவாக்கி இருக்கின்றார். -

இந்நூலை எழுதிய சரித்திர பேராசிரியர் அருள்திரு தே.அ. கிறிஸ்துதாஸ் ஐயர் அவர்கள் திருச்சபையில் தடம் பதித்த மகத்தான தேவ மனிதர்கள் பற்றி ஏராளமான நூல்கள் எழுதி இருக்கிறார். வட நெல்லை அப்போஸ்தலர் கனம் ராக்லாந்து ஐயரவர்களின் ஜீவிய சரித்திரத்தை கவனித்து படித்து ஓரளவாவது அவரது முன்மாதிரியைப் பின்பற்றுங்கள்.

'ஆம், நானும் போகாவிட்டால், போவது யார்? இதோ இருக்கிறேன் என்னை அனுப்பும் கர்த்தாவே', என்று கூறித், தன்னைத் தன் ஆண்டவரிடம் ஒப்புவித்தவராகச் சாத்தானை ஜெயித்த ராக்லாந்து வாழ்க்கை சரித்திரம் இக்காலத்திற்கும் நமக்கும் நமக்கு பின் வரும் சந்திக்கும் பொருத்தமானதாகவும் நம் முன் ஒரு சவாலையும் வைக்கிறது.




Tamil Printed Book- For Private Cirulation Only

Return Requested:


**CHRISTAVA VARALATRU SUVADUGAL**
# 2.2.3(4)North Street,
Bungalow Surandai-627859.
Tenkasi District
Tamil Nadu
Ph: 04633 290401


To


Owned & Published By TINNEVELLY CHRISTIAN HISTORICAL SOCIETY, Tamil Eduction- For Private Cirulation Only
Editor|G.MUTHAIAH SELVAKUMAR| at 2.2.3(4)North Street, Bungalow Surandai-627859. Tenkasi District Ph: 04633 290401